மருண்டார்வெருண்டார்வருசித்தர்நம்வள்ளலென்று
தெருண்டார்வியந்தார்சிவகாமியுந்தானுங்கண்ட
மிருண்டானெதிர்நின்றமைநோக்கியயாருமேத்திச்
சுருண்டார்தருபங்கிமுடித்தலைதுன்னித்தாழ்த்தார்............(௫௫)

வேறு.

செம்பொன்மால்வரையும்புதுநிறம்படைப்பத்திகழொளிவெள்ளியங்கிரியு
மும்பரார்பணியும்வெள்ளியம்பலமுமுலகுறுசராசரமனைத்தும்
பைம்பொனூர்நிறமாயதிசயம்விளைப்பப்படரொளிக்கிரணம்விட்டெறிக்குந்
தம்பிரானுருவமுனிவர்மூவருந்தாபித்தருச்சனைசெயமுயன்றார்.........(௫௬)

உம்பரார்பலருங்கோமுனியேவவுய்ந்தனமெனப்பணிமுயன்று
ரும்பரார்தச்சனுலயநகரமாதிகளுவப்புறப்புரிந்தா
னும்பர்கோன்காமதேனுகற்பகமுமுறுபொருடரப்பணித்திட்டா
னும்பர்கோனேவவுலகமாளரையர்தத்தமக்குறுபணிசெய்தார்...........(௫௭)

வடதிசைத்தலைவனிரம்புபண்டாரம்வாய்திறந்திருநிதிபோதந்
திடனகனகரமுழுவதுநிறைத்தானிடிஞ்சில்கள்கரகங்கள்கும்பம்
படரொளிமணியான்மயனிருமித்தான்பசுங்குசைசமிதைபற்பலவுங்
கடனறிமுனிவர்விதியுளிநாடிக்கவர்ந்தருமறைகரைந்திறுத்தார்...........(௫௮)

வானவர்குரவனுள்வரையறுத்தான்மகதியாழ்முனிவனுக்கமத்தி
னூனமில்விதியாற்குண்டமொன்பதும்வேதிகைகளுமொளிபெறவகுத்தான்
றேனமர்மலயமாதவன்பதிட்டைசெய்யுமாசானெனவமைந்து
வேனவில்கரத்தோன்முன்வரும்பட்டிவிநாயகன்பூசனைமுடித்தான்....(௫௯)

அங்குரமமைத்தன்முதல்வினையனைத்துமாகமவிதிப்படியாற்றி
மங்கலவியங்களியம்பவானவர்கண்மலர்மழைபொழிதரமன்றி
னங்கணருருவோடம்மைதன்னுருவினமைத்தபொற்கும்பநீராட்டிப்
பொங்கறுசுவையினிவேதனம்பிறவும்பொற்புறமுற்றுவித்தனனால்.......(௬௦)

கன்னிகைசெம்பொனிரசதங்கலைகள்கலனிலம்பரிகரியிரத
மன்னமற்றனைத்துமேற்பவர்க்குதவியருந்தவக்கோமுனிமுதலோர்
பன்னருஞ்சிறப்பிற்றம்பெருமானைப்படரொளிவெள்ளியம்பலத்துந்
துன்னுறுதினங்கடொறுமறுகாலந்துகளறுபூசனைபுரிந்தார்..............(௬௧)

வேறு.

இவ்வகைசெல்லுநாளிலெம்பிரானடனங்காட்டு
மவ்வருநாளுமண்மைத்தாயதென்றறிந்துமுன்னர்ச்
செவ்வியபதிட்டைக்குற்றோரனைவருஞ்செல்லாதாங்க
ணெவ்வமில்காலந்தோறுமேத்திவாழ்ந்திருந்தாராக..........(௬௨)

பங்குனிமதியஞ்சாரப்பட்டிமாமுனிவன்சென்று
தங்குகோமுனிவன்பாதந்தாழ்ந்திதுசெப்பினனு
னங்களையாளநம்பர்நடம்புரிநாளுமிந்தத்
திங்களின்வருவதற்றுற்செய்வதொன்றுண்டுகேண்மோ........(சங)

திருவிழாவெடுத்துநாதர்திருநடநவிற்றுமந்த
ஒருவிழாநாளுமந்தத்துற்றிடுநாளதாக
மருவியாநிற்றன்மாண்பாம்வரதவென்றியம்பவன்னு
னுருவியாமகிழ்ச்சிபொங்கவுவன்றனைத்தழுவிக்கொண்டான்..()

பட்டிமாமுனிவவிந்தப்பணிசெயத்தக்கதாகு
மிட்டமாமுலகுக்கெல்லாமிறைவற்குமிட்டமாகு
முட்டிலாதியற்றுகிற்பாமுறையுளியமரர்க்கெல்லா
மொட்டவீங்குறுவயாவுமுளுற்றுமாறியம்புகென்றான்........(சடு)

விடைமுகத்தவன்சொற்கேட்டோன்விச்சுவகன்மற்கூவி
யடையலர்புரங்கள்செற்றவடிகளார்விழாவுக்கேற்ற
நடைநகமிரதமாதிநலத்தகவாக்கிவைவேற்
படையவனெங்கைப்புத்தேள்படிவமாதியுஞ்செய்யென்றான்(சசு)

மயன்வருகென்றுகூவிவளநகராலயங்கள்
குயினுழைமாடமற்றுங்கோடணைபுரியவேவி
வயமலிகுலிசவேற்கைமன்னவற்கூவிவேட்ட
பயன்மலிபரிசில்யார்க்கும்பண்புறக்கொடுக்கவென்றான்.....(சஎ)

அவரவராற்றற்கேற்பவமலனூர்பணிகளேவி
யவரவர்தந்தையானவருந்தவன்விடைமுகத்தோற்
கவரவர்பணியினிற்பவறைந்தனனென்றுதாழ்ந்தா
னவரவர்பணிகளாகவனைவருமாற்றினரோ......................(சஅ)

தகட்டுடன்மீனாய்முன்னர்த்தவழ்ந்தகோமுனியுமண்ட
முகட்டையுந்துளைக்கும்வைவேன்முனைவன்சண்டிசனக
மகட்டிடையசைத்தபிள்ளையாதியோருருவத்தோடும்
பகட்டெழிலிரதமற்றும்பதிட்டைசெய்தமைத்துக்கொண்டான்()

பங்குனிப்பருவஞ்சேர்முன்பக்கத்தினிரண்டாநந்தை
தங்குகார்த்திகைநாட்புல்லந்தடங்கொடியேற்றிமைந்தர்
மங்கையுமருங்குபோதமன்றிடைநடிக்குமையர்
மங்கலமுழங்கவீதிவயினுலாப்போதச்செய்தான்..............(டுO)

வேறு.

கொடிநீள்கதலியுமுயர்பூகமுமதிகுயின்மேலிவர்தரமலிவித்துக்
கடியார்புகையொளிகனிசந்தனமலர்கவினொன்றியபுனனிறைகும்பம்
படிவேதிகையொடுபயில்காவணநிரைபடர்தோரணநிரைநிறைவித்து
முடியானவர்புகழ்மணிவீதியினகர்முறையாலிறையவன்வலம்வந்தான்..(௫௧)

கவிகைக்குளிர்நிழல்விரியக்கதிர்பொழிகவரித்திரளிருபுடைதுள்ளச்
சவியின்மணிவடமொளிர்சுற்றுடையனசாந்தாற்றிகள்பலததைநிற்ப
வவிர்விண்ணுடுவினதளவுங்குறைபடவடாத்தழனிமிர்தருபந்தங்
குவிமென்முலையவர்நடனத்தொடுமிறைகுலவீதியினகர்வலம்வந்தான்..(௫௨)

விண்ணாடுடையவரெதிர்தூவியவெயில்விரியும்பலமணிதிடர்செய்ய
மண்ணாடுடையவர்பரிவாய்மதகரிவளர்கைத்துளையுமிழ்புனல்வாரித்
தண்ணார்நதியெனவொழுகச்சரண்பணியிமையார்முடியொடுமுடிதாக்கித்
திண்ணார்மணிநிரைபொடிபட்டுகவணிதிகழ்வீதியினகர்வலம்வந்தான்...(௫௩)

மணிமொய்த்தொளிவிடுகனகச்சிவிகைதண்மதிமண்டலமெறுழ்வளர்பூதம்
பிணிவிட்டலர்மலரிரதம்விடைகரிபிறைவந்திறைகொளுமிரதத்தோ
டணிமெத்தியசிறையன்னம்பரியெழிலமையிந்திரநல்விமானத்துந்
திணிகட்செவியணிமுடியானொன்பதுதினம்வீதியினகர்வலம்வந்தான்....(௫௪)

ஒன்றேவியவொருபஃதென்றுணைபடவுறுநாள்கழியும்வைகறையிஞ்சி
வென்றார்பொறிவலிவென்றார்பணிசெயவிரைநீர்முதலபிடேகங்கொண்
டின்றானடநவில்பொழுதென்றனைவருமெழுநீர்நதிமுழுகிச்சார்ந்து
நன்றாமொருபஃதெனுநாட்சபையெதிர்நகைமாமணிசெய்மண்டபநிற்ப(௫௫)

அரிதாகியபணிபுரிகோமுனிமுதன்முனிமூவருமருகேநிற்ப
வரிவீணையினிசையுயர்நாரதமுனிமகிழ்தும்புருவுடனெழுவிப்பத்
திரியாவகைபலதாளங்குறுமுனிதிகழாநந்தியுமினிதொத்த
வுரிதாமுழவுமந்துவுநந்தியுமிருதலையுங்கரமலருறுவிப்ப....................(௫௬)

வருகந்தருவருமலியுங்கருடருமதுரத்துடனிசைபலபாட
வொருகந்தழிநிலையருளாலருளெனவுறுதாபதராகரவென்னப்
பெருகந்தரர்சிலர்வளர்சிந்தையின்மறைபெருவாரிதியொலிபடவோத
வருகந்தர்கண்முதலியதுன்மதியருமருள்கண்டடிதொழவணைகிற்ப......(௫௭)

ஆகாவென்பவர்கூகூவென்பவரருகுற்றரியமெல்லிசைபாட
வேகாவென்மரும்யோகாவென்மருமாகிச்சித்தர்களெதிரோத்தக்
காகாவெனவுரகர்கள்பன்மணியொளிகளுலத்திசைதிசைதொழுதாடப்
பாகாமொழியவள்பாகாவிடையொருபாகாவெனவவுணர்கள்பம்ப....(௫௮)

மன்றுடியகுருமணியேயடியவர்மதியாடியகளிநறவேபொய்
வென்றார்நுகர்சுவையமிழ்தேபத்திமைவிளைவார்விளைசிவவிளைவேபுல்
சன்றுனெனவுயிர்களின்வைத்தருளியகனிவேகருணைசெய்கனியேயென்
றென்றுதாவுடனுனையாவிழியிணையுறைசிந்திடவடியவர்தாழ........(௬௯)

ஒருபாலுமைதனதுருவின்விரவுறவொருகைத்துடியொலியெழவங்கி
யொருவாதொருகையினொளிரக்கவிதாவொருகையொருகரமமைவெய்த
வொருதாண்முயலகன்வெரிநிற்பதிவுறவொருதாள்குஞ்சிதமுறவீசி
யொருகாளியின்முகம்விழிநோக்குறமணியொளிரம்பலநடநவில்கின்றான்...(௬0)

தழலொத்தவிர்புரிசடையெண்டிசைதடவரவெண்மதியொடுபுனலுஞ்
வழகொன்றியகுழையசையக்குறுநகையலரப்புருவமுமுரிவெய்தச்
சுழல்கட்செவியரவிழிவெண்டலைதிணிதோளிற்றுயல்வரவதர்சேர்க்
வுழல்சில்லரிபயின்மணிநூபுரவொலியுறழத்திருநடநவில்கின்றான்.........(௬௧)

பூதங்களுமுறழ்கரணங்களுமெழுபொறியும்பொறியினுள்ளொளியும்
பேதங்களும்வருகாலங்களுமொளிபில்குங்கலைகளுமொளிவிந்து
நாதங்களுமவைதருபோதங்களுநவில்வேதங்களுமறியாமே
யேதங்கொளுமுயிர்போதங்கெடவிரசதமன்றிடைநடநவில்கின்றான்...(௬௨)

அளவாயளவதனளவாயளவதனளவுந்தணிதருமளவாகி
யளியாயளியதனளியாயளியதனளியுந்தணிதருமளியாகி
யொளியாயொளியதனொளியாயொளியதனொளியுந்தணிதருமொளியாகி[ன்.(௬௩)
வெளியாய்வெளியதன்வெளியாய்வெளியதன்வெளியின்வெளிநடநவில்கின்று

ஓராணவமுதலிருவல்வினைமலமூன்றும்முடன்முதலியநான்கு
மாராவுடலிடையுறுசாக்கிரமுதலைந்தும்மறுமுதல்வழியாறுஞ்
சாராவகைபெழுஞானம்பெறவருடகவெண்ணுநர்பணியொன்பானுந்
தேராவருள்பணிபத்துந்திகழ்தருதிசழம்பலநடநவில்கின்றான்..............(௬௪)

ஒருபான்றிசைகளுமொன்பானுருவுமோரெண்வடிவமுமுலசேழு
மருவாநின்றொளிராறுதாரமும்வளரைந்திணைகளுமறைநான்கும்
தருமூவழல்களுமிருமைப்பயனொடுதாறுகியவொருதனிவீடுந்
தெருள்வாரிடைத்தலதிலையென்றுணர்வுறுதிகழம்பலநடநவில்கின்றான்......(௬௫)

அஞ்சக்கரமெனவெட்டக்கரமெனவாறக்கரமெனநான்கென்னப்
பிஞ்சக்கரமுதலுருமூன்றெனவளர்போக்கரமுதன்மூன்றென்ன
நெஞ்சத்துறநவிலீரக்கரமெனநிலையோரக்கரமெனநின்ற
செஞ்சொற்றிறமிருநான்காகியும்பிறவாயுந்திருநடநவில்கின்றான்.........(௬௬)

நகரந்திருவடிமசரம்வயிறெழினகுதிண்புயம்வகரஞ்சீர்சால்
சிகரந்திருமுகம்யகரந்திருமுடிசிகரந்துடிகவிதருசெங்கை
வகரம்யகரமதபயந்தருகரம்வளர்நிநகரநன்மகரங்கீ
மூகனும்மூயலகனெனிர்வாசிகைபிரணவமாயொருநடநவில்கின்றான்..... (சுஎ)

தோற்றந்துடிதிதியபயந்தொலைவெரிதோலாமறைவுநின்றிடுதாளி
லேற்றுங்கழலினல்லருளுந்தகனிநலிமாயையையுதறிக்கன்ம
நீற்றிக்கருமலமிருவித்திருவருணிலையாலுயிர்களைவாங்கிக்கொண்
டாற்றுஞ்சுகவடிவாக்கிப்பதிவுறுமருளம்பலநடநவில்கின்றான்..........(சுஅ)

அருளோவிலெயனமேலாகியவுயிரருளான்மூதன்மையாதாயங்கு
மருளாலருள்புரிதொழில்செய்குவலெனமதியுற்றதனையுமொருவிப்போய்ப்
பொருளாகியவருளுருவாயதன்முதல்புகலென்றறிதல்செய்தருணின்றுந்
தெருளார்சிவமுடன்விரவிச்சுகமுறுதிருவம்பலநடநவில்கின்றான்........ (சுகூ)

வேறு.

சோதிமல்கியவிரசதசபையிற்றுரியத்தேவளர்வல்லியுந்தாமும்
போதியம்பொழிற்புண்ணியமுதல்வர்பொருந்தியத்தாரீசராய்நடிக்கும்
வேதநூபுரவொலியும்பல்லியமும்விரிக்குமின்னிசைசெவித்துளைநிறைப்ப
வேதமில்லவரனைவருங்கேளாவேங்கிநின்றனர்திருநடங்காணார்............(எo)

வெள்ளியம்பலத்தாட்டயர்முதலேவேதநாடரும்விழுத்துணைப்பொருளே
வள்ளிகேள்வனையுயிர்த்தமாமணியேவானவர்க்கறியாதவானவனே
புள்ளிமான்கரத்தேந்துவித்தகனேபுடைநெருங்குபூதப்படையானே
தள்ளியெம்வினையருணடங்காட்டாய்சங்கராசயபோற்றியென்றிரந்தார் (எக)

விரையத்தாண்டவங்கண்ணுறுமெலிவும்விண்ணெழுந்துநீர்சுரந்தமாமேகம்
புரையத்தாண்டவங்காட்டியல்லாதுபோதுறுனெனுமகிழ்வுங்சொன்டுள்ளுங்
கரையத்தாழ்ந்தவர்மறைப்பினைமாற்றிக்கருணைநோக்கெதிர்வழங்கினர்செய்ய
வரையுக்கார்த்தணியூர்தொறுமிரந்துண்டம்பலத்துநின்றாட்டயர்முதல்வர். (எஉ)

ஞானநாடகநவிற்றியெவ்வுயிர்க்குமுறுசகுணவலிசெடுத்தருளி
ஞானநாடகவிலுமங்கணனார்ஞானநாட்டநன்றருளலுமலம்போய்
மோனமாதவமுனிவரர்மூவராதியோரனைவருமுதிர்நடனத்
தானவானந்தங்கண்களாற்பருகியறிவுளேயறிவடங்கியொன்றானார்....... (எங)

உரையுங்காயமுமுணர்வுமெட்டாதவொருவரக்கரமைந்துமேயுறுப்பாய்
விரைகிலாவியபோதிசூழ்வரைப்பின்வெள்ளியம்பலத்தினர்த்தபூங்கூந்தல்
வரையணங்கொடுமாட்டயர்நடனமணிபொன்வானிதிமனைவியிற்பெரிதும்
புரைதன்பாலராய்ப்பேறுவார்க்குளதோபவஞ்சிவாநந்தம்பருகுவதல்லால்....()

பகீரதன்பெருந்தவத்திறற்புவியிற்பரந்தவானதியகிலமும்படர்ந்து
மூகேரெனக்குடைந்தாடநின்றதுபோன்முதிர்ந்தமாதவமுனிவரேயல்லாற்
றகிர்கணிவிரென்ஞெழித்தல்செய்யாதுசார்ந்தவர்க்கெலாஞ்சககசவாணவநோ
யுகிரென்றேம்பிதாண்டவந்தெரித்தருளுமொருவர்தம்பெருங்கருணையார்தெரிப்
பார். (௭௫)

அகிலலோகமுநடுநடுத்திரங்கவன்றுவாதுசெய்தூர்த்துவநடன
முகிலினேர்மிடற்றிறையவர்காட்டமுகத்தநாட்டங்கண்முதிர்நறுங்களப்
நகிலினட்டியகாளியுந்தவத்தாணங்கைபார்ப்பதிக்கெர்ப்பநல்வழுவைத்
துகிலினர்முகநோக்கிநின்றருளுந்தூயதாண்டவங்கண்டுகொண்டிருந்தாள் (௭௬)

வேறு.

விழிநீருகமெய்யினுரோமமிகப்பொடிப்ப
மொழிவாயின்விளங்கவெழாதுமுழங்கவங்கை
யொழியாதுமுகிழ்ப்பவுஞற்றியவாடல்கண்டோர்
கழிகூர்மகிழ்வானடமாடுதல்கைக்கொண்டாரால் ............... (௭௭)

அயனாடினனாடினனாரணனைந்தசூலப்
புயனாடினனாடினனீள்புயல்வேணியீசன்
மயனாடினனாடினன்வானவர்தச்சனெங்கைக்
கயனாடினனாடினனாறிருகையினேந்தல் .................... (௭௮)

விண்ணோர்முழுதாடினர்விஞ்சையராடினார்கள்
பண்வீணையராடினர்பன்னகராடினார்க
ளெண்மாதிரராடினரெண்மருமாடினார்கண்
மண்ணோர்முழுதாடினர்மாதவராடினார்கள் .................... (௭௯)

இருகோடிமருத்துவரீரிரண்டோடுநான்கு
வருகோடிவசுக்கள்வரைந்திடுபத்தொடொன்று
தருகோடியுருத்திரர்சாருமிராறுகோடி
யருகாவொளியாதவர்நால்வருமாடினார்கள் .................... (௮O)

அறுநான்கினிராயிரமாமுனிவோர்கள்சித்த
ருறுசாத்தியர்பூதரியக்கருலப்பில்பேயர்
தெறுதானவர்தெவ்வுமரக்கர்வேதாளர்கோள்க
ளெறுழ்நாள்களிராசியுமிக்கவுமாட்டயர்ந்தார் .................... (௮௧)

மலையாடினவாரிதியாடினமன்னுயிரே
முலகாடினவோங்கியவண்டமனைத்துமாட
விலகாதவிராட்புருடப்பெயர்வேந்துமாடிற்
றிலகீசரனாடினடாதவர்யாவரம்மா .................... (௮௨)

### வேறு.

நிருத்தநாடகநேருறக்காண்டொறுங்
கருத்தின்மிக்ககளியாலனைவருந்
திருத்தமாகத்தஞ்சேவடிதூக்கிநின்
றருத்திகூர்தரவாட்டயர்வேலையில்......................(அ௩)

ஐயனாடகமாட்டயர்வேகத்தி
னையன்மெய்யிலணிந்தவராவின
மையுணர்வுமயர்ந்துவருத்தமுற்
றையவங்கணுமிழ்ந்தனவாலமே.......................(அ௪)

அணையினன்றித்தனாக்கைமுழுவதும்
புரிவினாற்புலித்தோலிறைபோர்த்திட்டாங்
கெரியையென்றிலகுந்திருமேனியின்
வரிகளாகவழிந்ததவ்வாலமே.......................(அ௫)

மிண்டுமொலத்தின்வேகமுடற்றலுங்
கண்டநின்றகடுவெளிக்கொண்டதோ
மண்டுபொப்பணிவாய்விடமோவென
வண்டராதியனைவருமஞ்சினார்.......................(அ௬)

இரிந்துளார்சிலரேங்கினரோர்சிலர்
பரிந்துகாவென்றிரந்தனர்பற்பலர்
இருந்துநாடகச்செவ்வியின்மாய்தலும்
பொருந்தனன்றென்றிருந்தனர்பற்பலர்.......................(அ௭)

ஒசியவுள்ளமங்குள்ளவர்யாவர்க்கும்
பசியுந்தாகமும்பம்பியதன்னதைக்
கசியுநெஞ்சினர்கண்ணகலாதமர்
ரொசியுநுண்ணிடைப்பார்ப்பதிநோக்கினாள்.......................(அ௮)

### வேறு.

தனதொருகூற்றாலன்னபூரணியைத்தந்தனளன்னபூரணியும்
வனமுலையன்னைமலரடிவணங்கிமற்றெனக்கருள்பணியாவ
தெனவுமையம்மையெம்பிரானடத்துக்கெய்தியவனைவரும்பசியான்
மனமடிவடைந்தாரன்னநீவழங்கிவளரெனத்திருவருள்பணித்தாள்.....(அ௯)

ஒருசரத்தேந்தும்பாத்திரத்தன்னமொருகையிற்சராவத்தானள்ளி
யிருள்வளர்கூந்தலன்னபூரணியங்கிட்டனளொருமுறையதுபொற்
பெருவரையென்னவளர்ந்ததுகண்டுபெருகியமகிழ்ச்சியானெவரு
மருவினர்முகந்துவாய்மடுத்துண்டுவென்பசிதணிந்தனர்மலிந்தார்.........(௯0)

வரைமுகம்புழுங்கச்சுடரயில்விடுத்தவள்ளிதன்கேள்வனுளிரங்கி
விரைகமழ்வேணீர்வியவரிற்கொணர்ந்துவிடுத்தருந்தாகநோய்தணித்தார்
புரையறவுடலின்விரவியவெப்பம்புழைக்கைநீர்துளிக்குமாறுயிர்த்துத்
தரையிடையெவருங்குளிர்ப்பமேற்படுத்துத்தந்திமாமுகத்தவன்றணித்தான் ()

அஞ்சலையஞ்சலென்றிரிகுநரையங்கையாலமைத்தனன்வீர
னெஞ்சலுறுமையிரிந்தவர்வருகென்றிசைவுறக்கூவினன்வடுகன்
றஞ்சமுறுமையவரவர்க்கிடங்கள்சமைத்தனன்சேத்திரபாலன்
மஞ்சிவர்நகரங்காவல்செய்சண்டிவருத்தங்கள்விஞயருள்புரிந்தான்.... (௯௨)

வேறு

அனைவருமகிழ்ச்சிகூர்ந்தாரம்பலத்தாடுமைய
ரனையவர்முகத்தினோக்கியருளினாலருளிச்செய்வார்
வனைபுகழ்மன்றமீதின்வயக்கியநடநமென்றுங்
கனைகடலுலகில்யாங்குமொருவர்க்குங்காட்டிலேமால்.........(௯௩)

ஞானத்தானம்மையன்றிவேறொன்றுநாடாச்சிந்தை
மோனத்தானுயர்ந்தசண்டிமொய்த்தநம்மருளாலென்றும்
வானத்தார்வணங்கக்காவன்மருவுமிம்முத்திவைப்பின்
மீனத்தாம்விழவுநோக்கியந்தணிராதலாலே.........................(௯௪)

மும்மலமிரியவிந்தமுதிர்சுவைநடனங்காணச்
செம்மலும்பெற்றீரின்னுஞ்சிந்தையின்வேட்டவெல்லாங்
கொம்மெனவிரந்துகொண்மினென்றனர்குவலைக்கண்டர்
தம்மடிவணங்கியாருந்தனித்தனிவரங்கள்கொள்வார்...............(௯௫)

கரமலர்முகிழ்த்துத்தாழ்ந்துகாலவமுனிவன்சொல்வா
னரவகலல்குலார்தமாசையுநிலனும்பொன்னும்
புரவியல்போகமுற்றும்புரையெனப்போக்கியென்னை
வரமலியடியினீழல்வைத்தனையேனுமெந்தாய்.......................(௯௬)

இரவிமுன்விளக்குக்காட்டாதாயினுமிருக்குங்காறும்
விரவியுமதனைக்கண்கள்வித்தகமாகுமன்றே
பாருறுபயத்ததாகும்படிவமுமெனக்கற்றோமற்
காவுசெய்தருளல்வேண்டுங்கடல்புரைகருணைவாழ்வே............. ௯௭)

திருவருள்புரிந்தஞான்றுஞ்சிறியனேனிரந்தேனீதன்
றருணடங்காட்டிப்பின்னரறைந்தவாபுரிதுமென்னக்
கருணையினுரைத்தியின்பக்காமர்நாடகமுங்கண்டேன்
மருள்வளருடலமின்னேமாற்றுதல்வழக்கேயென்றான்...........(௯௮)

புறக்கணியாதவண்ணம்பூரணன்கடைக்கணித்தான்
சிறக்கணித்திட்டயாக்கைதீர்ந்ததுமுனிவன்வல்லே
மறக்கணித்தடர்ப்பமேலேவருவினையின்றியொன்றா
யறக்கணித்தருளுமின்பத்தவசமாயழுந்தினானே..................(௯௯)

கவலையம்பிறவிவேலைகடந்திடுந்தொள்ளமான
தவலருவெள்ளிமன்றின்றனிநடங்காணும்பேறு
சவலையிலாதசேடன்றன்னினுந்தகைமையுன்னிக்
குவலயநிறத்துமேனிக்கோமுனிவியந்துபின்னர்............... (௧௦௦)

கடகரியுரிவைப்போர்வைக்கண்ணுதல்பாதம்போற்றி
நடநமிவ்வெள்ளிமன்றினாடொறுமடியனேற்கு
முடலிதுகழிநாட்காறுமுஞற்றுதல்வேண்டுமென்றா
னடலைகொண்டணிந்தபெம்மானங்ஙனமாகவென்றான்........(௧௦௧)

நாகத்தார்மருமத்தண்ணனடநமிங்செய்துபேறு
மோகத்தானன்றேயென்றுமோகத்தாள்பாதமுன்னி
மாகத்தார்வியப்பமைநூற்றினையவார்கூந்தன்மங்கை
பாகத்தான்சரணந்தாழ்ந்துபட்டிமாமுனிவன்சொல்வான்.....(௧௦௨)

இத்தலத்திருக்கையோர்க்குமித்தலந்தரிசித்தோர்க்கு
முத்தமநடனங்காணுமுறுதவத்தவர்க்குமீளா
முத்தியையளிக்கநிற்றிமுக்கணாவேட்டுளார்கட்
கத்தமும்பொருளுமின்புமிவையுநன்றருளல்வேண்டும்.........(௧௦௩)

அள்ளலம்படுகொரானவணங்கினர்போகவாழ்க்கை
யெள்ளிநானடனமொன்றேகண்டுகொண்டிருத்தல்வேண்டும்
வள்ளலேயென்றிரந்தான்வரமெலாமளித்துநீண்ட
வெள்ளியம்பலத்துளாடும்விகிர்தன்மற்றிதுவுநல்கும்.............(௧௦௪)

படைப்பினைவேட்டுநம்பாற்படர்ந்தனையாதலாலே
யிடைப்படும்படைப்போர்கூற்றானெய்துமுன்னுருவந்தாங்கிக்
கடைப்படாதங்கிருந்துகடைப்படவாக்குநந்தங்
கொடைப்பெருநடனநாளுங்கும்பிடிவ்வுருவினீங்கே......... (௧௦௫)

மாயனுந்தொல்லைமேனிவாய்ப்புறக்கொண்டோர்கூற்றாற்
பாயபல்லுயிரையெல்லாம்பாற்கடற்றுயின்றுகாத்துத்
தூயவிவ்வடிவினீங்குச்சுடரொளிவெள்ளிமன்றி
னேயநன்னடனநாளுநியதிகொண்டினிதுகாண்க...........(௧௦௬)

சூரனாலச்சமெய்திச்சுரர்கள்வந்தபயமெய்த
வாரநாமளித்துக்காத்துவதிவித்துச்சூரனாவி
யாரணாண்முலைப்பாலுண்டவமரனால்விளித்தாமற்றாற்
றீரமாங்காஞ்சிவைப்பிற்சிவனுநர்க்கிடும்பையில்லை ..... .........(௧௦௭)

பகையினான்மன்னைதன்னாற்பார்த்திவர்தம்மானோயாற்
றகைசெயுமனுவால்வானோர்தங்களாலவுணர்தம்மான்
மிகைசெயுமரக்கரானும்விலங்குசெந்துக்களானும்
புகையழலானுமீங்குப்புல்லுநர்க்கச்சமின்றே........................(௧௦௮)

எந்தமைக்குறித்துநீசெயெரியழற்குண்டத்தென்றுங்
கந்தவெண்பூதித்தோற்றங்கழிவின்றிவளர்வதாக
வந்தவெண்பூதிபோற்றுமவர்களும்வேட்டதெய்திப்
பந்தமுற்றிரியச்சொன்னபொருளினும்பயமுந்தீர்வார் .............. (௧௦௯)

ஆனந்தநடனநோக்கியனைவருநம்மைப்போல
வானந்தமுள்ளத்தினீடவாட்டயர்ந்தனர்களன்றே
யானந்தமருளுநம்முனன்னனமாடுவோர்க்கு
மானந்தமுறுகவேட்டபொருள்களுமடுப்பதாக.......................(௧௧௦)

என்றிறைவரங்கணல்கவிட்டகாமியம்வேட்டோரு
மொன்றுவேட்டோருமன்றினாறுநடம்வேட்டோர்யாரு
நன்றிசெய்முனிவர்வாங்குநல்வரமக்குஞ்சாலு
மன்றவென்றிரந்துவேறுவரங்கொளாதமைதிபெற்றார்...............(௧௧௧)

ஒன்பதோடேழுகையினொளிர்படைதாங்கிநம்பன்
மன்பதைக்கிரங்கியாடமலர்புரைகரங்களெட்டின்
மின்படைதாங்கிவாதுவிளைத்துமுன்னணிநின்று
பின்பருணடனங்கண்டபெய்வளைவணங்கிக்கூறும்.. .......... ....(௧௧௨)

தெவ்வரைமுருக்குஞ்சூலத்தேவனேபோதிசூழ்ந்த
விவ்வரைப்பிடைநின்றோங்குமிரசதமன்றினேயேற்
கொவ்வருநடனங்காண்டன்முதன்மையையுறுத்தாயன்றே
யெவ்வெவராருமீங்கிம்முதன்மையானாறுகவென்றாள்...............(௧௧௩)

அன்னணமாகவென்றானமலனாதனைக்கேட்ட
மின்னிழையுமையாள்காளிமிளிர்முகநோக்கியாடத்
தன்னுளத்தரும்புமூடல்புலவியாய்வரந்தானல்கப்
பின்னதுதனியாய்நீடப்பெரிதுமற்றிதனைச்செய்தாள் ...............(௧௧௪)

## வேறு.

நாடகங்காண்டலின்முதன்மைசும்மது
பாடகத்தளிரடிப்பாவைமற்றவள்
பீடுறக்கொள்ளுமேயென்றுபிஞ்ஞக
ஞேடுசெம்பொன்னிகருருவினீங்கினுள்.............. ........... (கக௫)

பரிசனம்பாதங்கண்டிறைஞ்சுமாதவர்
வரிசைசெயமுதர்கண்மற்றுளோரையுங்
கரிசிறன்கணங்களாற்காதிக்கொண்டுபோய்ப்
புரிசடைக்கடவுளைப்புலம்புசெய்தனள்.......................... (கக௬)

வாயிலாற்றுணியினைமாற்றித்தாதைநற்
றுயிலானயமொழிதந்துபுல்லுறீஇ
நீயிலாதிருத்துமேகிசழ்முக்கோணமெய்க்
கோயிலாயென்றவள்குளிர்ப்பக்கூறுமால்......................... (ககஎ)

பல்வகைமன்றினுட்பத்தர்க்கின்னரு
ணல்வகைமன்றுநல்லனவவற்றுளுஞ்
சொல்வளர்நஞ்சிறூர்தொழுதுபோற்றிய
வெல்வளர்மன்றெமக்கினியவாகுமால்.......................... (ககஅ)

எமதருத்தோன்றியெஞ்சிறூர்களாகிய
கமலனுநேமியுங்கழிப்பிவல்வினை
விமலனைதயடைந்துமெய்நடனம்போற்றுறுந்
தமரமன்றிதுதகவுயர்ந்ததாயினும்....... ...................... (ககக)

ஓங்கியவிரசதவோங்கன்மீமிசைத்
தாங்கியவிரசதசபையைநேர்வதன்
றுங்கதுபிரமர்நாரணரளப்பிலார்
நீங்கியதொழிலராய்ப்போற்றநின்றதே........................... (க௨0)

ஆக்கலுமழித்தலுமாயவூழ்வினை
நீக்கமில்லார்தொழநின்றவிச்சபை
யூக்கியநடமுவள்காண்கவச்சபைத்
தாக்கருநடனநீதகவிற்காண்கவே........... ........... .......... (க௨க)

இச்சபைநாடகத்தின்றுபோலெறுழ்ப்
பொச்சமில்காளிதான்போற்றுமேல்வையின்
முச்சகந்தொழுதெழுமுதல்வியென்றுந
மச்சொடும்விரவியொன்றுதிதாழவே...... .................... (க௨௨)

என்னநல்வரமுமைக்கினிதுநல்கிரு
ணன்னமும்பன்றியுமறிவொணுதவன்
மின்னியவிரசதவெற்பினூழியு
மன்னியவிரசதமன்றிற்சென்றிஞன்.......................... (௧௨௩)

எண்ணிலர்பிரமர்களெண்ணிலாரண
ரெண்ணிலரிந்திரரெவரும்போற்றுற
வெண்ணில்பல்லியநணியியம்பவாடிஞ
னெண்ணிலாக்கருணையெம்பிராட்டிகாணவே ............... (௧௨௪)

முழங்கினதுந்துபிமுனிவரார்த்தனர்
தழங்கினசிலம்பொலிதாளமேங்கின
வழங்கினநரப்பிசைவங்கியத்திசை
பழங்கணிலெதிரொலிபறம்புசெய்யவே.............. .........(௧௨௫)

ஆடினர்சிலரெதிராடியாரணம்
பாடினர்சிலர்மறைபாடியின்னருள்
கூடினர்சிலரருள்கூடியானந்த
நீடினர்சிலரிறைநிருத்தம்போற்றினர்............ ............ (௧௨௬)

வரையெலாந்தாண்டவநாதமல்கிப்பின்
றரையெலாம்பரத்தலிற்றரையுளார்சில
ருரையெலாங்கடந்தொளிரொருவன்குன்றினும்
புரையெலாந்தபப்புகுந்தாடல்போற்றினர்.................... (௧௨௭)

அன்றுபோலென்றுமவ்விரண்டுமன்றினு
மன்றலங்கடுக்கைவார்சடிலத்தெம்பிரா
னின்றருணடநிகழ்த்துமாருயிர்க்
கொன்றியமலப்பிணியோட்டந்தெய்க்கவே....................(௧௨௮)

இருசபையிடத்தினுமீண்டுநாதங்க
ளொருமுறைசெவியுறத்தவமுஞற்றினோர்க்
கருள்பெறயோகுழந்தாங்குக்கேட்குமப்
பொருவிறுதமும்புறக்கணிக்கும்பெற்றித்தே ................... (௧௨௯)

மன்றிணைச்சேயிடையிருந்துவாழ்த்தினு
மொன்றியதிசையுறநோக்கித்தாழினு
நன்றெதிர்நோக்கினர்நவிற்றக்கேட்பினு
மன்றியகாதரமவர்கட்கில்லையே....................................(௧௩௰)

அற்றைநாளந்திவந்தணையவண்ணலார்க்
குற்றபூசனைநணியுஞற்றிமாதவர்
பொற்றவெண்கயிலையம்பொருப்பிலேற்றினர்
கொற்றவீதியைவலங்கொள்ளச்செய்தனர் ..... .. ....... .... (கரு௧)

மன்றிடைத்திருவுருவாதன்வைகிய
பின்றைவார்கொடிப்படப்பெற்றந்தாழ்த்தினர்
வென்றபூங்கழலடிவேந்தராதியோர்
நன்றுதம்மிருக்கையைநண்ணிவாழ்ந்தனர். ................(கரு௨)

பத்திசெய்கோமுனிபட்டிமாமுனி
யுத்தமரிருவருமுறுதங்கூற்றினுற்
கொத்துறுவையகங்குயிற்றிக்காத்தருள்
வித்தகனடந்தொழுநியமமேவினர். ........................(கரு௩)

உலகமுற்றுயிர்த்தருளுமையுந்தானுமா
யலகில்பல்லுயிர்க்குநல்லறிவுநண்ணுமா
றிலகியவிரசதமன்றினென்றுநந்
தலைவனைந்தொழினடந்தரநின்றனரோ ......................(கரு௪)

நாயகன்விழவுநாடகமுங்கண்டுமுன்
பாயமெய்த்தவத்தினர்பலருமுய்ந்தன
ராயவக்கதைபுகன்றடியனேனுமின்
றேயும்வல்வினைப்பவமிரித்திட்டுய்ந்துளேன்..... ....... ...(கரு௫)

அளவினைக்கடந்தொளிரமலனுடகத்
தளவினையென்னறிந்தறைந்துளேனென்றன்
றுளவினையணிந்தவனுயதூமுனி
வளவினதபுமடிவழுத்துஞ்சூதனே ..........................(கரு௬)

உய்ந்தனமடியரேமெழுமைத்தோற்றத்து
முய்ந்தனமெனப்பணிந்துறுவர்கூறுவார்
மைந்துடைச்சூரிஞும்வானுளோர்பயஞ்
சிந்தியதென்றுமுன்றெரிக்கப்பட்டதே....................... (சரு௭)

அக்கதைவிளங்குமாறருள்வதென்றனர்
பொக்கமின்முனிவார்புகறல்கேட்டலுங்
கொக்கிறகணிந்தொருகோலங்கொண்டரு
ணக்கனையுளத்துறீஇரவிலுஞ்சூதனே .......................(கரு௮)

நிருத்தப்படலமுற்றியது.

ஆகத் திருவிருத்தம்--(அ௮௰)

# அபயப்படலம்.

முக்கணக்கனைமும்மதவேழத்தின்
றெக்கணிந்தசுருதித்தலைவனை
யிக்குவேற்றுமைசெய்துவிண்ணேரொடுந்
தக்கயாகஞ்சமைத்தனன்றக்கனே....................(௧)

மாறுபட்டமைநோக்கியவள்ளலா
ரேறுபட்டவெறுழ்வலிவீரனு
னூறுபட்டொழிவெய்தவிண்ணோர்மக
நீறுபட்டறநிக்கிரகஞ்செய்தார்........................(௨)

பகைஞனேடன்பட்டதொர்பாதக
மிகைதணிந்ததுவீரன்சவட்டலாற்
றங்கொண்டெஞ்சியபாதகத்தின்பய
னுகர்வித்தேநொடிப்பானுளத்தெண்ணினார்.........(௩)

மாயைபாங்கர்மறுவறுகாசிப
னேயமாகிநிறையழிகாதலிற்
றேயமூவரைத்தோற்றினர்சூரனே
சீயமாமுகன்றாரகச்செம்மலே.........................(௪)

மோகமாமலமூன்றுமொத்தன்னவர்
பாகசாதனனெஞ்சம்பதைப்புற
யாகமாங்கவிசாரத்தியற்றினு
ரேகநாதனிடைவரம்வாங்கினர்..........................(௫)

எண்மர்வன்மையிளக்கினர்மாலயன்
றிண்மைமுற்றுஞ்சிதைத்தனரிந்திரன்
கண்மலர்த்தலைவன்கணுறுந்தொகை
யுண்மையண்டமொராணைசெலுத்தினர்..............(௬)

தானவர்க்குத்தகைமைபெருக்கினர்
வானவர்க்குவருத்தந்திருத்தினர்
கானமல்கியகற்பகநாடெலா
மூனமல்கவொலிதழலூட்டினர்..........................(௭)

இன்னவாறவரின்னல்விளைத்தலிற்
பன்னகத்தின்பறைவிழத்தாக்கிய
மன்னனுதியர்வைகிடமற்றனர்
கன்னிபாகன்கயிலையைச்சார்ந்தனர்......................(௮)

வெள்ளியங்கிரிவித்தகவெங்களை
யுள்ளியுண்ணினல்லாற்கதமாறிலாத்
தொள்ளையுள்ளத்தூச்சூரனையஞ்சினேம்
பொள்ளெனப்புரட்டாயெனத்தாழ்ந்தனர் ..............(௯)

கருடன்றாக்கியகட்செவிபோலவுந்
தருமன்றாக்குநரகர்தகையவும்
வெருவுமுள்ளத்தராயவிண்ணோர்க்கெலாங்
கருணைநாதர்கடைக்கணித்தோதுவார் ..................(௧௦)

தக்கனோடுமகத்திற்றருக்கிய
மிக்கபாவம்விளித்திலிராதலாற்
றெக்கசெல்லற்றுளைந்தனிரிவ்வெலாம்
பக்குவிட்டறப்பண்ணுதுங்கேண்மினோ..................(௧௧)

வேறு.

மாயவனேநின்றுமறையவனேநின்றுமலர்க்கண்மெய்யின்
மேயவனேநின்றும்விண்ணவரேநும்மாலும்விளியாவாற்ற
[illegible]லுமடர்ப்பரிதூஉமதுவிழியழலிற்றோன்றுஞ்
[illegible]துதேவர்காளவன்வருநாளளவுநீயிர்...............(௧௨)

[illegible]புரியென்றொருவைப்புளததனில்விரவிவாழ்வார்க்
[illegible]லைப்பிணியில்லைப்பயமில்லையிலம்பாடில்லை
தேங்க[illegible]ம்புகழுண்டுவலியுண்டுநலமுண்டுதேசுமுண்டு
தூங்கலுறும்பேரின்பமுளதாகுந்தயங்கியவத்தலத்தைச்சார்மின்.. (௧௩)

[illegible]யிற்சென்றடி[illegible]லொடுமெரியபாதகரும்மையகல்வதாகு
மா[illegible]லிபினவ[illegible]ன்றண்டமுறும்வயினினிமேன்மருவாகுட்டுச்
சேவல்வலமுயர்த்தவனுஞ்சிறுவரையினுமக்கிரங்கித்தெவ்வைச்சாடு
மே[illegible]ரவலியழிக்குமருதவரையவனுளதுமேகவென்றார் ......(௧௪)

வேறு.

வெள்ளநதியிற்பிள்ளைவெண்மதி
தொள்ளமென்னநள்ளுந்துமுடி
வள்ளல்விள்ளமருதமால்வரை
கொள்ளுமொள்ளல்கூறுகென்றனர் ...............(௧௫)

சிறகர்வண்டுசென்றுவிழ்சலா
நறவமாலைநாறுந்தோளினூர்க்
குறவிஞனுள்ளமோகைகொள்ளமெய்
யறவன்மேன்மையறைதலுற்றனன் ..... .......... (கசு)

முருகனென்னுமொய்சொண்மொய்ம்பினு
னுருகுமன்பர்க்குதவிசெய்யவே
பெருகுசாமர்ப்பிறங்கலாயினு
னருகின்வேலுமருதமாயதே........................ (கஎ)

மருதவண்டுமலர்ப்பொதும்பரின்
மருதம்பாடவாய்ந்தவேள்வரை
மருதநின்றமறுவில்காட்சியான்
மருதவோங்கலென்னமன்னுமே .................. (கஅ)

காலவங்கிச்கடவுள்வேணியிற்
சாலவைகுந்தன்புனனதி
ஞாலம்விண்டுநண்ணும்வேர்வழி
மூலம்வந்துமுன்னுகின்றதே........................ (ககூ)

வேறு.

அத்தகுதீர்த்தவரவினைக்கேட்டோரணிவளர்நம்முலகுறுவ
ரத்தகுதீர்த்தங்கண்ணுறக்கண்டோரழகியநமதருகிருப்ப
ரத்தகுதீர்த்தம்படிந்தவர்நந்தமழிவிலாத்திருவுருவெடுப்ப
ரத்தகுதீர்த்தம்பருகினோர்நந்தமடியிணைநீழல்விட்டகலார்................ (உ0)

மண்ணைகோட்பட்டோர்மண்ணையினகல்வர்மகவிலார்மகவினைப்பெறுவர்
கண்ணொளியிகந்தார்கண்ணொளிபடைப்பர்கவினிலார்கவினுருத்திகழ்வர்
பெண்ணலமிழந்தார்பெண்ணலமுறுவர்பிணியினர்பிணியிலராவ
ரெண்ணியவரங்களெண்ணியாங்கியைவரெனவருமனையதீர்த்தத்தால்..(உக)

சுசியிலாததனைத்தொட்டிடின்வறக்குஞ்சுசிசெயிற்பண்டுபோற்சுரக்குங்
கசிவுறுமுள்ளத்தடியவர்க்கெம்பாற்கலப்புறக்கரையழிந்தெழுந்த
வசிபெறுமன்பினுருப்பவிர்வேனில்வைகியபொழுதும்வற்றாத
நொசிவறுதீர்த்தமதுதனைமருததீர்த்தமென்றகிலமுநொடிக்கும்...... (உஉ)

ஆங்கதணயலேகன்னிகைதீர்த்தமதனயலேகந்ததீர்த்த
மீங்கிவைமூன்றுந்தென்புறச்சாரலிருப்பனவடபுறச்சார
லோங்கியவலுமதீர்த்தமொன்றுளதாலுமைமகனிருக்கையின்மேல்பாற்
றுங்கியவுச்சிவரையிடையுளதுசரவணப்பொய்கையென்றென்று...... (உ௩)

அருச்சுனதீர்த்தம்போலவேயுரைத்ததீர்த்தமுமறமுதனுன்கும்
வருத்தமொன்றின்றியளிப்பனவாகும்வைகலுமவ்வரைச்சார
லுருத்திகழ்காமதேனுவுற்றுலாவியுறுபசியிரிதரமேய்ந்து
மருத்திகழ்தீர்த்தம்பருகிநீள்சோலைமலர்நிழலயர்வுயிர்ப்பதுவே.........(உச)

உம்பர்காளந்தவரையினைக்கண்டோருவப்புறக்கேட்டவர்பணிந்தோர்
வம்புலாங்கடப்பந்தாரினுனுங்குவதிதருமுருவழிபடுவோர்
செம்பொனுதிகளாற்றிருப்பணிபிறவுஞ்செய்பவரிவரெலாஞ்செயிர்தீர்ந்
திம்பரினெதிரில்செல்வாரும்பரின்பெலாங்கைக்கொள்வரெளிதின்... (உரு)

உத்தமமாகியொளிருநம்முகங்களோரைந்துமுமைமுகமொன்றும்
வித்தகமின்றியவன்முகமாருய்விளங்கினவாதலான்மரீர்
சத்தியுஞ்சிவமுமெனநினைந்தயில்வேற்சண்முகன்சரணமேசாணு
வத்தகுவரையினருந்தவம்புரிமினவனருள்வழங்குவனென்றுன்...... (உசு)

வேறு.

அண்ணலாரருள்செய்தலு, மெண்ணமுற்றியதின்றெண
விண்ணுளார்கள்வியந்தனர், மண்ணினேகவலித்தனர்......(உஎ)

விமலனுர்விடைபெற்றனர், கமலவாவிகலந்ததோ
ரமலனுதிபுரத்தினைச், சமலநோயறச்சார்ந்தனர்........... (உஅ)

காஞ்சிமாநதிகண்டனர், வாஞ்சையோடும்வணங்கினர்
பாஞ்சசன்னியபாணிய, னுஞ்சுராதிபனுதியோர்............(உகூ)

பரந்ததோயம்படிந்தனர், சுரந்தகாதறுளும்பமெய்
நிரந்தரித்தனர்நீற்றணி, யரந்தைதீர்கடனுற்றினுர்............(௩0)

கோயிலைக்குறுகுற்றனர், வாயின்முன்னர்வணங்கினுர்
தாயினுந்தயையுய்த்தரு, ளுயனுரெதிர்நண்ணினுர்............(௩க)

அமிழ்தலிங்கத்தினுதியை, யமிழ்தரானவரன்புகொண்
டமிழ்தமெல்லிசையாற்றுதித், தமிழ்தவின்னருளார்ந்தனர் (௩உ)

ஞரனச்சந்தொலைத்தனர், வாரமன்றும்வணங்கினர்
சாரல்வெள்ளிச்சயிலமே, ஞரவேணியைநண்ணினுர்.........(௩௩

கண்டுகண்கள்கலுழ்ந்தனர், தண்டெனத்தரைவீழ்ந்தனர்
கொண்டவன்பிற்குனித்தன, ரண்டகாவென்றரற்றினர் ... (௩௪)

நல்லகாஞ்சிநதிக்கரை, யெல்லைமுற்றுமிருக்கைகொண்
டொல்லிலிங்கமுறத்தழீஇ, வல்லபூசைவயக்குவார் ......... (௩௫)

வேறு.

நாரணனொருபாற்பூசைநடத்தினனளினமேய
வாரணனொருபாற்பூசையமைத்தனனவிரும்வெள்ளை
வாரணனொருபாற்பூசைவளர்த்தனன்மல்குவானோர்
சாரணரொருபாற்பூசைசமைத்தனர்தழைத்தவன்பால்...... (௩௬)

விஞ்சையர்கருடர்வீணைவித்தகர்யோகர்சித்த
ரஞ்சையுமடக்குமாணமையருந்தவமுனிவர்யாரு
நெஞ்சிடையுறுதியுன்பினிறையொடுவேறுவேறு
தஞ்செயலடங்கவீசன்றனிச்செயற்பூசைசெய்தார் ......... (௩௭)

அயன்வரையுமையாளோங்கலவிரொளிவெள்ளிவெற்புப்
புயனிகர்மேனிச்செல்வன்பொருப்புயர்மருதக்குன்றென்
றியலுமைந்தடுக்கன்மாட்டுமிரும்புனற்றீர்த்தந்தோறும்
வயமருளிறைவனார்தமலரடிபூசித்தாரால் .................. (௩௮)

துவன்றியன்னவர்களன்பிற்றொழுஞ்சிவக்குறியுளொன்றிற்
பவன்றனைநினைந்துபோற்றும்பண்பினர்பகையுந்தேயுங்
கவன்றவுட்பயமுந்தீருங்கதியவர்க்கொல்லையெய்தும்
புவன்றனதடியினீழற்பொருவில்வாழ்க்கையுமுண்டாமால் (௩௯)

விண்ணவர்க்கபயநல்கிவிமலனாரச்சந்தீர்த்த
வண்ணமீதறிமினென்றுமாதவர்க்கியம்பிச்சூதன்
பண்ணவர்க்கிரங்கிச்சூரைப்பறந்தலைப்படுத்துமாட்டுந்
திண்ணியமணிவேலண்ணல்செயலினைத்தொகுக்கலுற்றான் .. (௪௦)

அபயப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம்-(௬௨௦.)

# மருதவரைப்படலம்.

கருதுவார்க்குக்களிதரவல்லது
பொருதுவார்க்குப்புயவலியீவது
சுருதிநீண்முடிபோல்வதுதூய்மையின்
மருதவோங்கல்வளத்திற்பெரியதே.....................(க)

காமனுக்குநற்கட்டழகுய்ப்பது
நாமகட்குங்கலைநவில்விப்பது
பூமகட்குஞ்செல்வம்புணர்விப்பது
போர்மகட்கும்வன்போர்த்திறஞ்சேர்ப்பது...........(உ)

எண்ணுவார்தமிடர்கடவிர்ப்பது
கண்ணிற்கண்டோர்கருத்தினிருப்பது
விண்ணங்குத்திமிளிர்ந்தமுடியது
பண்ணைவண்டுபயில்பொழிலுள்ளது................ (ங)

கால்காலனுங்காமுறநிற்பது
கோலமானவன்கும்பிடப்பட்டது
ஞாலமீன்றவனுறத்தக்கது
வேலனேயுருவானவியப்பது ........................ (ச)

பத்தர்கோமுனிபட்டிமுனிவனு
நித்தநித்தநிரந்தரித்துள்ளது
சித்தர்வானவர்திப்பியமாதவர்
சுத்தயோகியர்சூழ்ந்தபரப்பது........................ (ரு)

எண்மைத்தாயதொழில்சற்றியற்றினும்
வண்மைத்தாகவரும்பயனுய்ப்பது
திண்மைத்தாகியதீமைபெருக்கினு
நுண்மைத்தாகநுவலுமுன்மாய்ப்பது................... (சு)

வாழைமென்கனிமந்தியின்றுபோய்த்
தாழைதாவச்சடசடவீழ்கனி
கூழைவன்குரக்குக்குலங்கொண்டுகேற்
பூழையூடுபுகுதுமோர்பாலெலாம் ..................... (எ)

கன்னிகாரங்கருந்துணர்ப்பாடலம்
வன்னிகொன்றைமந்தாரங்குராமராப்
புன்னைபிண்டிபொரியரைக்கூவிள
மன்னுநந்தவனங்களோர்பாலெல்லாம்....................(௮)

மயிலைமாலதிமல்லிகைபித்திகை
ய்யின்முகைத்தளவங்குளவிக்குலம்
ப்யிலுமாதவிபம்பியசூழலி
ணியலும்வண்டினிசையொருபாலெலாம்........... (௯)

நாரந்தமென்கனிநாவலந்தீங்கனி
காந்துமண்ணுட்கனிபலவின்கனி
நிரந்தமுந்திரிகைக்கனிநித்தலுஞ்
சுரந்துவாசஞ்சுலாவுமொர்பாலெலாம்............... (௧௰)

ஏலமேயிலவங்கங்கச்சோலந்தக்
கோலமாஞ்சியுங்குங்குமமுங்கடி
காலநின்றகருப்புரவாழையு
ஞாலம்வெளவநன்றுகுமொர்பாலெலாம்............. (௧௧)

நாகநீண்முழைநாகங்கண்டச்சுற
நாகதாளியினன்கனிபாம்பெனத்
தோகைமஞ்ஞைதொடர்ந்துமுன்கொத்திநின்
றாகமோடவுலைக்குமொர்பாலெலாம்................(௧௨)

சரோருகங்களுநீலமுந்தங்கிய
பரோடைநீரொடுமெட்டைபருகுதோ
லுரோமநீண்மரத்தொண்குழைவாய்மடுத்
தரோகமெய்தியதிர்க்குமொர்பாலெலாம் .............(௧௩)

கனையெருமைமரங்கள்கனைத்தலுங்
கனையெருமையெனக்கதழ்வேங்கையங்
கனைநல்லார்மனுவாற்கட்டப்பட்டன
கனைமலர்ப்பொழில்காட்டுமொர்பாலெலாம்..........(௧௪)

காயவாழ்க்கையர்காயமிவையல
மாயமென்கொலிவ்வன்மரம்வைகலுஞ்
சாயையில்லெனச்சார்ந்தவரையுறச்
சாயையில்லாத்தருக்களோர்பாலெலாம்...............(௧௫)

விடபத்தேறிகின்றார்க்குவிழாச்சளுங்
கடகவேழமுங்காமருதேர்களுந்
தொடர்பினேனவுந்தோற்றிவிடுத்திடி
னடலேயாக்குநற்றருவொர்பாலெலாம் ............ (கசு)

சருகுகாய்கனிவெளவத்தனுதழை
விரவுவாரைவிளாரிற்றணிந்தடித்
தரவிற்சீறிநல்லாவிம்டித்திடு
மூரனிலாவுமரமொருபாலெலாம்.................... (கஎ)

சுவானக்குட்டிகடொக்கவெண்புக்க
கவான்வரைத்தலேக்கண்டபுலிப்பறழ்
சுவானக்குட்டியிற்காய்பலதோற்றிய
சுவானக்குட்டிமரமொருபாலெலாம் .................. (கஅ)

வழுத்தும்வேடமகாரினமானுடம்
பழுத்துநிற்பனபார்த்துக்கிலுத்தத்தைக்
குழுக்கொண்டாடநும்பிள்ளையுங்கூட்டுகென்
றெழுக்கத்தோடுமிரபபொருபாலெலாம்............ (கசு)

தங்குலத்தறுந்தையலராமென
வெங்குலக்கொடுவில்லினர்பேதையர்
மங்குல்சூழ்வரையின்மகண்மாவைக்கண்
டிங்குவம்மின்களென்பதொர்பாலெலாம்............ (உ0)

கருடவேகத்திற்காடுசுலாவுந
ரிருடியாமென்றிறைஞ்சிவிடுத்தெழப்
புருடவன்மிருகம்புழைவைகிய
வருடையாடும்வரையொருபாலெலாம்................(உக)

வேறு.

இவ்வாறுபெருவளங்கொண்டேழாடேழா
மவ்வாய்மையுலகனைத்துமணைந்துபோற்றுஞ்
செவ்வாய்மைமருதவரைத்தேத்துத்தேவ
ரொவ்வாதபசைமாய்ப்பவுன்னிச்சார்ந்தார்.......... (உஉ)

மாலாதிவானவர்தம்வரவுகேளா
வாலாலமனையவினையகற்றியங்கு
வேலானேநினைந்திருக்கும்வினைச்செல்வன்
காலாரநடந்தெதிர்போய்ச்சண்டுதொழுந்தான்.........(உங)

வருக்வருகெனநெடுமால்வணங்கிஞனை
யிருகரமுமுறத்தழுவியெடுப்பியன்பான்
முருகனருட்குரியையெனமுகமன்கூறி
யொருவவிதுகேட்டியெனவுரைக்கலுற்ருன்.........(௨௪)

ஆயிரங்கண்ணனை விண்ணினகற்றியன்ருன்
சேயிரங்கச்சிறைப்படுத்ததியோனச்ச
மாயிருந்தண்போதிவண்ம்வந்துமென்பூத்
தூயிரந்துபரனருளாற்றெலைத்தாமிப்பால் ......... (௨௫)

அழியாதவரம்படைத்தவுணர்கோனை
வழியோடுங்கெடுத்தெமக்குவாழ்க்கைநல்க
வொழியாதவடிமையொருமுருகற்காற்றக்
கழிகாதலொடுமிங்குக்கடிதுபுக்காம் ............... (௨௬)

மாழாந்தவெமக்கிரங்கிமணிவேனம்பி
தாழாதுவினைமுடிக்கத்தக்கவாய்மை
சூழாவொன்றுரைத்தியெனச்சொன்ஞன்சொன்ன
வேழாழியுலகுண்டோற்கிருடிகூறும் ...............(௨௭)

வேறு.

சிவதருமம்பலவவற்றுட்சிறந்ததுபூசனையதனு
ளவமில்பல்வுபசாரத்தைந்துசிறந்தனவவற்றைத்
தவமலியப்பதிஞறுமண்டலந்தண்டாகியற்றிற்
கவலையறப்பயனிம்மைப்பிறப்பிடையேகைகூடும்............(௨௮)

ஆங்கவைதாமபிடேகமரியவிரைவிளக்குமனுத்
தாங்குமருச்சனைநிவேதனமாகுமிவைதம்மை
யோங்கும்வகையியற்றுவதுமுரைப்பக்கேண்மந்தரத்தின்
வீங்குதிரைக்கடல்கலக்கிவிண்ணவர்க்குச்சுதையளித்தோய்(௨௯)

பரிதிகுணக்கெழுமுன்னர்ப்பன்னிரண்டுபுதுச்சாலின்
மருவுபுதுப்புனறுகிலான்வடித்தெடுத்துமண்பரப்பி
யிருவிநிறைதொறுமேலமுதலானதிரவியங்கள்
பெருகுவிரைமலரோடுபெய்துமனுவாலமைத்து ............ (௩0)

அரம்பைநெடுங்கனிதிருத்தியாயிரத்துக்காறுபடி
சுரந்தமடுப்பசுவின்பால்சொரிந்துசெழுந்தேன்றுநெய்
பரந்தசுவையக்காரமிவ்விரண்டுபடியட்டி
வரந்தழைபஞ்சாமிரதமணிக்கலத்தினினிதமைத்து......... (௩௧)

பாங்கானபால்செந்தேன்பன்னியமுவகையினீ
ராங்கானவைந்தமிழ்தமருவிரைச்சந்தனக்குழம்பு
மோங்காரத்துட்பொருளாமொருமுருகனுருவாட்டி
நீங்காமையிடையிடையேநிறைநீர்சங்கினிலாட்டல்.........(௩உ)

இளநீரையொருகலத்துமேலாமைத்தனித்தனியே
யளவாரவெடுத்தாட்டினதிகபலனுறுமைந்து
முளதானவபிடேகத்துயர்ந்தனவாம்விரையிரண்டாந்
தளராதவிலேபனமுந்தயங்குசுகந்தமுமென்ன...............(௩௩)

காசில்பனிநீர்பச்சைக்கருப்பூரங்குங்குமப்பூ
மாசிலுரோசனைபுழுகுமான்மதநாவியுங்கலந்த
வாசிகந்தமலாக்காச்சந்தனமிலேபனமதனைத்
தேசவிருந்திருமேனிமுழுதுஞ்செறிதரக்கொட்டல் ......... ௩௪)

முல்லையிருவாட்சிபிச்சிமுகைநெகிழ்மல்லிகைபன்னீர்
நல்லமருக்கொழுந்துவெட்டிவேரிவைநற்சுகந்தங்கள்
சொல்லுமிவையோரேழுந்தொடுத்துருவந்தெரியாமை
வல்லபடியலங்கரித்தன்மணங்கமழப்புறமெல்லாம்.........(௩௫)

ஒருபடிநெய்கொளத்தகழியுறவுயரமும்பர்பிரான்
றிருவிழியினளவுமுறத்திகழுமிரசதத்தியற்றிக்
குருமலியம்மணிவிளக்கங்கிருபாலுங்கொளவிருவிக்
கருதுகபிலையதிலதேற்காராவினெய்நிரப்பி ......... ......(௩௬)

செம்பருத்திவெண்பஞ்சிற்பசுங்கருப்பூரஞ்செறித்துப்
பம்புவிரற்பருமையுறப்பண்ணுதிரிநுதிக்கொளுத்தும்
வெம்புமெரிக்கொழுந்தெழுந்துபன்னிரண்டுவிரலளவை
வம்பிலதாயிருபகலும்வயங்குவதாம்விளக்கன்றே............(௩௭)

செய்யதாமரைநூலிற்றிரிகோடல்சிறப்பினதா
மையபசுங்கருப்பூரமகப்படாதொழிவுறினே
கையமருமாலத்திக்கருப்பூரந்திரிக்காகும்
நெய்யுரைத்ததிலதாயினோர்ந்தபசுநெய்யுமாம் ...............(௩௮)

வெள்ளியினுன்மணிவிளக்குவிதிப்பரிதேல்விளக்கமுற
வொள்ளியவெண்கலத்தானுமுஞற்றுதலாம்பலவிளக்குத்
தெள்ளுமுறையுறுவிக்குந்திறனிலதேலொன்றேனும்
வள்ளலவன்றிருமுன்னர்வயக்குவதுமரபாமால் ..........(௩௯)

சேயிதழ்ப்பங்கயங்கொண்டுசேவல்வலமுயர்த்தபிரா
னாயிரநாமமுநவின்றங்கருச்சிக்கவருச்சனையி
தேயுமலரிலதாயினிலகியவெண்டுளசியொடு
தூயபசுங்கூவிளங்கடொகுத்தடியிற்றூவுதலாம்.. ..... ...... (ச0)

பால்புரையுமரிசியொருபடிக்குப்பால்படிமூன்று
சால்பசுநெய்படிகால்சர்க்கரைகழஞ்செண்பதிற்றிரட்டி.
யேலமொடுசுக்கிடித்தவிழ்வீசம்படியிரதங்
காலுமுயரிளந்தெங்கின்கனியொன்றுமுறப்பெய்து ......... (சக)

பாகமுறச்சமைந்ததற்பின்பசுங்கதலிக்கனிபதினைந்
தோகையொடுந்தோலொருவியொருங்குபடுத்தினிதெடுத்த
மாகர்விழைபரமானம்வயங்கவருச்சித்தவுட
னேகனுக்குநிவெதிக்கவிதுநிவேதனமாமால்.................... (சஉ)

வளமாரவிவையையூந்தும்வருடமிரண்டுறவாற்றற்
குளதாகும்பொருளில்லாருருப்பவிரும்பின்பனியே
யிளவேனின்முதிர்வேனிலெனும்பருவமூன்றினிலு
மளவாரச்செயினுரைத்தவவதியுமாற்றினராவார் ............ (சங)

முப்பருவத்தினுமவற்றைமுற்றுவிக்குந்திறனிலரேற்
செப்பியவாறுள்ளகத்துச்செய்தொருசாரினிதுவகிந்
தொப்பரியான்மனுவயுதமொருநாளைக்குறக்கணிச்சி
னெப்பொருளுமவர்க்கெய்துமிடர்முழுதும்விரைந்தறுமே...(சச)

எனமகதியாழ்முனிவனியம்புதலுமுலகுண்டோன்
மனமகிழ்ந்துசமலன்மகவானிமையோர்புடைசூழ
வனகனுயர்வரையேறியருச்சுனமூலத்தினெழும்
பனிவிரவுநறுந்திர்த்தம்படிந்தாடிக்கடன்முடித்தான்...... (சரு)

புரந்தரனைநான்முகனைப்புலவர்குழாத்தினைநோக்கி
யரந்தைநமக்கறவேண்டினருந்தவன்சொற்படிநீயிர்
பரந்தபொருள்கொணர்ந்தேவற்பணிபுரிகென்றானன்னோர்
சுரந்தமகிழ்வினராகித்தொழிறலைநின்றனர்புரிய ........... (சசு)

ஆராதபெருங்காதலகங்கிளைப்பமருதவரைச்
சீராரும்பெருமானைத்தேவர்கள்சிந்தாமணியை
வாராருமுலையுமையாண்மகிழ்தூங்குங்குலக்கொழுந்தைக்
காராருநிறத்தினென்கடப்பாட்டிற்பூசித்தான்.................... (சஎ)

நாரதன்செப்பியமுறையேநாரணன்பூசித்திருப்ப
வாரணமும்பல்லியமுமரகரவோசையுமயங்கப்
போரணவும்வீரர்களும்பூதர்களும்புடைநெருங்கக்
கூரணவும்படைவேற்கைக்குமரவேளெதிர்நின்றான்........(சஅ)

வேறு.

ஓராறுமணிமுடியுமோராறுதிருமுகமுமொராறுவாயு
மீராறுமலர்விழியுமீராறுகுழைச்செவியுமிராறுதோளும்
போராரும்படைபலவுந்தாராரும்வரைமார்பும்புலம்புந்தண்டைச்
சீராருஞ்சேவடியுமழகெறிப்பநின்றானைத்திருமால்கண்டான்..... (சகூ)

வானவர்தங்குலமுழுதுமுய்ந்தனவென்குலமுழுதும்வாழ்ந்ததின்றே
தானவர்தங்குலமுழுதுஞ்சாய்ந்ததெனுமோகைதலைசிறப்பவல்லே
தேனறுந்தண்மலர்துவிச்சேவடியின்மணிமோலிதிட்டியும்ப
ரானவர்கள்சிவசிவவென்றார்ப்பவலம்வந்துதுதியாரச்செய்வான்..(ருo)

வேறு.

மூரண்மணியிமைக்குமோலிமுடிசெழுமுருகபோற்றி
மரணமும்பிறப்புநீத்தோர்மதிவளரமுதபோற்றி
யிரணவல்லவுணராவியிறுத்திடுமிறைவபோற்றி
யரணெனவெம்மைக்காக்குமறைகழலறவபோற்றி..........(ருக)

இருள்கெடவிளங்கியேற்றோர்க்கின்னருள்வழங்கிமுத்தி
மருவினர்கன்மமோர்ந்துமறைமுடிப்பொருள்களெல்லாந்
திருகறவிளக்கியொன்னார்ச்செற்றுவண்குறவர்மாதோ
டருள்வளர்நகைகொண்டாடுமறுமுகத்தலைவபோற்றி.........(ருஉ)

வேறு.

ஐயருக்கேந்தியுக்கஞ்சேர்த்தூருவமைத்தொளிரங்குசங்கடாவி
வையிலையெஃகும்வட்டமுந்திரித்துமார்பொடுமமைந்துதாரோடு
தையுறப்பொலிந்துமீமிசைச்சுழன்றுதடமணியிரட்டிவான்பொழிந்து
தெய்வமங்கையர்க்குவதுவைசூட்டயர்ந்துதிகழும்பன்னிருகரபோற்றி...()

நிழல்சுளித்தெழுந்துகுலாலன்சக்கரம்போனேரலர்நெடுங்களத்தலமந்
தழல்விழித்துருமிற்பிளிறிமும்மதமும்ருவியிற்சலசலபொழிந்து
சுழல்வளியெழுப்பிமுறச்செவியசையத்துதிக்கையின்வளிநிலங்குழிப்பக்
கழலடிப்பொருநருயிருணுங்களிற்றிற்காட்சிதந்தருள்பிரான்போற்றி.. .(ருச)

முருகுகொப்பளிக்குமடுக்கிதழ்ப்பொகுட்டுமுளரியுங்குமுதமுமறியப்
பொருசயலுகளுஞ்சரவணப்பொய்கைபொலிவுறவின்றுவீற்றிருந்தங்
கருகுவந்தடுத்தமீன்முலையருந்தியாக்கையினிளமையோமயையத்
திருகுவன்கோட்டுத்தகரிவர்ந்தூருஞ்செல்வன்றிருவடிபோற்றி...... (ருரு)

ஓமெனுமொழியினுறுபொருள்வினவியுள்ளவாறுரைத்திடவல்லா
நாமமள்கொழுநன்றனைச்சிறைப்படுத்துநறுமலர்க்கொடுங்கணைக்கழலிற்
காமனைமுனிந்தகண்ணுதற்பரமன்காமுறக்குருமொழிகொடுத்த
சேமமேமருதவரைவளரமிழ்தேதிருவருள்வழங்குகவென்றான்.. ...... (ருசு)

வேறு.

மதுவுயிர்குடித்தவன்வழுத்திநிற்றலுங்
கதுமெனத்திருவுளங்கருணைகூர்தர
விதுவணிசடையவன்விழியிற்றோன்றிய
முதுமறைமுடியினன்மொழிகின்றனரோ...... (ருஎ)

நமதுருவாகியநவிரத்திவ்வயி
னம்துருவுளத்திடைநாட்டிவானுளீர்
நமதடிப்பூசனைநன்றியற்றினீர்
நமதருள்வழங்குதுநாட்டம்யாதென்றான் ...... (ருஅ)

கடம்பணிபுயத்தினன்கரையக்கேட்டன
ரிடம்படுவானவரெழுந்துதுள்ளினு
ருடம்பிடித்தடக்கையினொருவனின்புறக்
குடம்படுகூத்தினன்குழைந்துகூறுவான்.........(ருகூ)

வேறு.

பரிதிவானவனொளிகெடமூவிருமுகனும்பல்கதிர்வீசித்
திருவெலாந்தரநிற்பதுகாண்டலிற்றிசைகளுன்கொடுமேல்கீழ்
மருவுமூவிருவைப்பினுஞ்சூரனுல்வதிதருகொடுங்கோன்மை
யிருளெலாமிற்றைவைகலேயிற்றதென்றெண்ணினமிவணைந்தாய்()

செம்மையம்புயத்தேமலர்வென்றொளிதிகழ்தருமுகந்தோறும்
விம்முதண்கருணைக்கடலூற்றெழவிளங்குமிவ்விருநாட்ட
மம்மகண்ணுறக்காண்டலினுரைத்தவாறிடத்தும்வாழடியார்பா
லிம்மையும்மையென்றிரண்டுமோர்ந்தனவெனவெண்ணினமிவணைந்தாய்()

உருத்திரப்பெயரண்ணலார்பதினொருவருங்கொடிகணைகண்டை
வருத்துதோமரம்வச்சிரமங்குசம்வனசம்வாண்மழுத்தண்டம்
பருத்தவார்சிலையாயருட்சத்தியேசத்தியாய்ப்பகர்நின்கை
யிருத்தல்காண்டலினிறந்தனபகையெனவெண்ணினமிவணைந்தாய். ()

கடிநிலாவியவெட்சிமாலிகைமுடிக்கவினக்காண்டலின்வென்றிக்
கொடிநிலாவியதானவர்கோட்டத்துக்குரங்கியல்லாந்தன்னே
மிடிநிலாவியசயந்தனைமுதலியவிண்ணவர்குழாமென்னும்
படிநிலாவியபசுவுமீண்டனவெனப்படர்ந்தனமிவணைந்தாய்...(சுங)

என்றுநாரணனியம்பலுமுறுவலித்தெம்பிரானெதிர்நோக்கி
யொன்றுமஞ்சலிரிற்றைநாளேபடையொடுநடந்தொன்னாரைக்
கொன்றுநும்பதியருளுதுமெனவிடைகொடுத்துவல்லெறுழ்ப்பூத
வென்றியம்படையெழுகெனவியவரின்வியன்முரசறைவித்தான்(சுச)

அமரர்தச்சனையழைத்துவீரர்கண்முதலாந்தலைவருக்கெல்லாஞ்
சமரவண்பெருந்தேர்களுங்கரிகளுந்தாவுமான்களுமாக்கித்
திமிரமன்னமெய்நிறத்தினர்க்கதிசயஞ்செய்வனகொடுவென்னுக்
குமரநாயகனருளினன்யவனனுங்குயிற்றினனவர்க்கீந்தான்...(சுரு)

வீரவாகுவைவிளித்தனன்வீரர்களிலக்கத்தெண்மருமண்ட
மாரமாக்கினோன்முதலியதலைவர்நூற்றெண்மருமடுபோரிற்
கோரமேபுரியிராயிரவெள்ளமாங்குழிவிழிக்கணர்தாமும்
யாருநீவியங்கொளப்படுவாரெனவீந்தனனதிகாரம்.............(சுசு)

வாழிமுப்புரங்குறுநகையாலெரிமடுத்தவன்சிறுவனந்தன்
வாழிவேலவனடியவர்குழாமெலாம்வாழிவையகம்வாழி
வாழிவிண்ணவர்சூரன்மேனம்படைவகுப்பெலாமெழுகென்று
வாழிவண்முரசெருக்கினர்வியவரினுணர்ந்திடுமியவோரே.....(சுஎ)

அலக்கணித்தலும்வானவர்க்காற்றியவவுணர்தம்படைமுற்றுங்
கலக்கத்தக்கசாரதர்களுஞ்சாரதத்தலைவருங்கவினார்ந்த
விலக்கத்தொன்பதின்மரும்பரிகரியெழிலிரதம்பாகர்கள்பண்ணி
நலக்கத்தந்தெதிர்தொழவவற்றிவர்ந்தனர்நாளொடுகோளஞ்ச..(சுஅ)

முருகவேளுடன்வருகவென்றருளலுமுகுந்தனுமலர்த்தேவும்
பெருகயாகநூறியற்றியவரையனும்பிறங்கியசுரர்யாரு
முருகுகாதலிற்றொழுதெழுமுனிவருமுவந்துதத்தமக்கேற்ற
திருகிலாதநற்சிறப்பொடுதோன்றினர்சயசயசயவென்றார்......(சுகூ)

மிக்கசாரதப்படையிராயிரவெள்ளம்வீரர்விண்ணவர்யாருந்
தொக்குமேவுறக்கொண்டுபல்லாயிரவண்டமுந்துனைந்தோட
முக்கணாயகன்மனத்திடைத்தோற்றியமுழுமணிப்பொலந்தேரைத்
தக்கமாருதவலவன்முன்றரவிவர்ந்தருளினன்றனிவள்ளல்......(எ0)

## வேறு.

படகந்திண்டிமம்பணவமானகங்கிணைபம்பை
துடிதடாரிசல்லரிதக்கைதுந்துபியுடுக்கை
குட்முழாமுரசாகுளிதொண்டகங்குளிரு
மிடிப்லாயிரமுழங்கியதெனவியம்பினவால்................(எக)

மடைவயிர்க்குலங்காளம்பீலிவண்டாரை
குடவளைக்குலங்குழலினமுழையெனக்குமுற
மிடையும்பல்வகையாழ்களுமெல்லிசையெழுப்ப
வுடையநாயகன்விருதெழுந்துலம்பினமுறையான்.........(எஉ)

வடிநெடும்படைமிளிர்ந்தனமிளிர்ந்தனமணிப்பூண்
கொடிநிரைக்குலந்துவன்றினதுவன்றினகுடையுங்
கடிகொள்சாமரைமறித்தனமறிந்தகால்வட்டம்
பிடியன்னார்நடைச்சிலம்புகள்சிலம்பினபெரிதும்..........(எங)

நிரந்துநால்வகைப்படைகளும்புடைவரநிமலன்
பரந்தநானிலம்பொறாதெனப்பனிவிசும்பாறு
விரைந்துமுந்துறக்கிரவுஞ்சவிலங்கலையடுத்தான்
சுரந்தசேனையோடெதிர்த்தனன்றாரகத்தோன்றல்.........(எச)

படைகளேண்டியுமத்திரம்விடுத்தும்பட்டிமைக
ளடையமாயைகளாற்றியுமமர்த்ததாரகனை
யுடையநாயகனோங்கியசிலம்பொடுமொறுத்துத்
தடையெலாந்தபச்சூரன்வாழ்நகர்ப்புறஞ்சார்ந்தான்......(எரு)

வரையினோடுதனிளவலினுயிர்தபமாட்டித்
திரையுநீர்க்கடற்றடையெலாஞ்சிறுவரைகடந்து
புரையிலாநகர்ப்புறத்துவேளடுத்தமைகேளா
வரையனுகியசூரனுமழலுயிர்த்தெழுந்தான்...............(எசு)

## வேறு.

காசிபன்மாயையைக்கலந்துதோற்றிய
வாசிறுமிறுநூறுயிரவெள்ளத்தரும்
பேசியவிவர்வழிப்பிறந்தவீரரு
மேசின்முன்னுள்ளவரெவருமீண்டினர்........(எஎ)

இரதமுங்கரிகளுமிவுளிப்பந்தியும்
விரவியகொடிகளும்விளங்குந்தொங்கலும்
வரமலிகவிகையுமாதிரந்தொறும்
பரவுறச்சூர்மகன்பாரித்தேகினன்...............(எஅ)

வஞ்சகன்வரவினைமதித்துவானவ
ரஞ்சினரமரர்கோனுகம்வேர்த்தனன்
கஞ்சனுங்கலங்கினன்கலங்குகின்றதோர்
நெஞ்சினைத்தேற்றினனெடியமாயனும்.........(எக)

வேறு.

அறந்தலைதிரிந்தபதகன்போர்புரியவாடலம்படையொடுவிரையப்
பறந்தலையடுத்தானென்றுநாரதன்போய்ப்பணிந்துநின்றுரைத்தமைகேளா
நிறந்தழைகடப்பந்தாரினுனிரதநெரேலெனச்செலுத்திநேரடுத்தான்
மறந்தழைதிணிதோள்வீரரும்படையுமறலினர்தூசிமேனடந்தார்.........(அ௦)

சூலம்வெங்கணைவேலபயமும்வலப்பாற்றொடிக்கையினிடக்கையின்வரதஞ்
சாலும்வண்கதைவில்பாசமுந்தயங்கச்சந்திரன்மணிமுடியெறிப்பக்
கோலமுற்றமைந்துமடங்கலூர்ந்திருபாற்குவிமுலைமாதரிவ்விருவ
ரேலும்வண்பலகைவாளொடுமேவலியற்றுசூலினியுமுனடந்தாள்.........(அக)

வேறு.

வெம்புபசிக்கண்மெலிந்தவர்வெய்யநறுஞ்சுதைகண்டெனப்
பம்பைமலிந்தபறந்தலைப்பாடமர்முன்புகிடைத்திடாத்
தும்பைமலைத்தெழுமள்ளர்கள்சூழ்நெடுங்காலமும்வாழ்கெனத்
தம்பரமாமிறையோர்களைச்சாற்றினர்போர்கடொடங்கினுர்...(அஉ)

கொடிகணுடங்கவையத்தொடுகொம்மெனவையமெதிர்ந்தன
வெடிகொண்முழக்கொடுவேழமும்வேழமும்வேறுமலைந்தன
படிசிதர்கொள்ளநடம்பயில்பரியொடுபரிகளமர்த்தன
வடிகழல்கட்டியதானையுந்தானையுமாறுகொண்டேற்றன.......(அங)

செல்பலவேழந்திமிங்கலந்திமிங்கலகலங்கணிகர்த்தன
பல்பரியுந்திரைசெத்தனபல்கியகூர்மநிகர்த்தன
வெல்பலகைக்குலம்வாளைகள்வீழ்ந்தனவேலொடுவாள்களுந்
தொல்படைத்தேர்கலனொத்தனசூழ்கடலொத்ததுதானையே....(அச)

ஒள்ளியபாய்விரிகூம்புகளொத்தனவோடிரதக்கொடி
விள்ளுடல்வார்குருதிப்புனல்வித்துருமக்கொடிபோன்றன
தெள்ளியவீரர்விழிப்பனசேர்வடவாமுகம்வென்றன
மள்ளர்தெழித்தெழுமோதைகள்வாரிதியோதைமலைத்தன.....(அரு)

ஆகமந்தாங்கியமீனமுமாரணமீட்டருண்மீனமு
மாகர்நறுஞ்சுதையுண்ணியமந்தரந்தாங்கியகூர்மமு
மாகியவுணத்தலைவர்களாடமரிற்கைமிகுந்துராய்
வேகநெடும்படைசாரதவேலைதுளும்பவுழக்கினுர்...............(அசு)

செங்கையின்வார்வலேவீசியசெம்மலரிகரபுத்திர
னங்கரனுெத்தவுணப்படைக்கதிபர்தமாற்றலழித்தெதிர்
பொங்கியதானவமாக்கடல்போகுயர்மந்தரமத்தென
வெங்கண்விறற்சிலேப்பாரிடவீரர்துளும்பவுழக்கினர்.............(அஎ)

தானவர்வேலேகலங்கலுந்தானவர்கோன்விறன்மைந்தர்கள்
வானவர்மேலடர்நஞ்செனவன்மைகொள்பூதரையோப்பின்
ரானநஞ்சுண்டமர்தேவெனவ்வையெனவீரவர்குப்பெயர்
மானவன்கைத்திறங்காட்டியம்மைந்தரைமாய்த்தொளிதோற்றினன்.()

கணங்கண்மகிழ்ந்தெழுந்தாடினகவந்தமனந்தநின்றுடின
துணங்கைகொண்டாடினபேயினந்துன்றினவன்கழுகுக்குலம்
வணங்கலகின்பருந்தின்குலம்வானுயர்பந்தரியற்றின
பிணங்கண்மலிந்தபறந்தலேப்பெட்பினெருங்கினநாய்நரி..........(அகூ)

எங்குமுடைந்தபொலஞ்சகடெங்குமுலந்தகடாக்கரி
யெங்குமடிந்தவயப்பரியெங்குமடங்கியமள்ளர்க
ளெங்குந்துணிந்ததிணிந்ததோளெங்குந்துமிந்தநிமிர்ந்ததா
ளெங்குங்குறைந்தமுடித்தலேயெங்குங்குரைக்குநெய்த்தோர்நதி..(கூ0)

வேறு.

இன்னவாறுசேனேயோடெதிர்த்தமைந்தர்வீழ்கள
முன்னர்நோக்கிநன்றுநந்தமொய்ம்பிஞற்றலின்னினி
யொன்னலாரையாவியுண்டொழிப்பலென்றுகாய்ந்தகான்
வன்னியென்னநேர்ந்துளான்மடங்கன்மாமுகத்தனே.....(கூக)

சுரிகையாய்தங்கப்பணஞ்சூலநேமியீட்டிவாள்
பரசுபிண்டிபாலம்வேல்பாசங்குந்தமுசுண்டிவச்
சிரமெழுக்கழுக்கடைசிலேகுயங்கலப்பைதண்
டுரிமைகொண்டபூதர்கண்டொல்லேமேலடர்ந்தனர்.......(கூஉ)

வரைதிரண்டபல்புயமடங்கன்மாமுகத்தன்மேற்
றிரைதிரண்டவேலேவீழ்செல்லெழுந்துமேருவி
னிரைதிரண்டதாரைகணிரப்புகின்றதாமென
வுரைதிரண்டபூதர்களொண்படைவழங்கினர்.............(கூங)

தேகமுட்டிநோன்படைசிதர்ந்துவீழநீண்முழை
நாகநின்றுசிங்கமொன்றுநாகமேலடர்ந்தெனப்
பாகமல்குதேரிழிந்துபல்லிதழ்ப்படுத்தவன்
சாகரத்தையொத்தபூதர்தங்கண்மேற்படர்ந்தனன்........(கூச)

வேறு.

மன்னிரும்படைசுமந்தகைத்திரளின்மல்குபூதர்சிலரைத்தழீஇச்
செந்நெல்வாரியெனத்தரைக்கணுயிர்சிந்தமோதியயல்வீசிடு
நன்னர்நேல்லுநவைவையும்வேறுநடந்திறுக்குமெருமைத்திர
ளென்னவன்கழலினுற்றுகைத்துயிரிறுக்குமெற்றியுமொறுக்குமே.......(கூரு)

நோக்கினுற்சிலரைமாய்க்கும்வன்மொழிநொடிப்பினுற்சிலரைவீக்கும்வார்
மூக்கினீடியவுயிர்ப்பினுற்சிலரைமொத்துமத்தமிகுசிங்கமாய்த்
தாக்குமாயனுநடுங்கவீரர்கள்சழங்கநீளிரதம்யாவையு [ளான்.(கூசு)
மோக்கியொன்றன்மிசையொன்றையொய்யெனவுடைக்குமூழியழலொத்து

இலக்கவீரருமொரெண்மருந்தலைவர்யாருமேற்றபலபூதரு
நிலக்கண்வீழ்ந்தவசமாகநோக்கியயனின்றவீரபுயனேர்ந்தவ
னலக்கணெய்தசிலையாயிரங்களுமறுத்துநீடமர்விளைத்துயிர்
கலக்கமெய்தினனறிந்துமைந்துமிகுகந்தவேள்ரிதமுந்தினுன்..............(கூஎ)

வேறு.

கண்டுசிங்கமுகனங்கிவிழிகாலமொழிவா
னண்டராருயிரளிக்கவருகின்றனையிதோ
மண்டுபோர்நுமரைமாய்த்தனைவிடுத்துமிளமை
கொண்டுளாய்குறுகுநுந்தையிடையென்றனனரோ......(கூஅ)

வெய்யசிங்கமுககேண்மொழியின்வெற்றியுளதோ
கையிஞலெமதுவென்றிநனிகாண்டியினிநீ
யுய்யவேண்டினிமையார்சிறையொழித்தியிலையே
லொய்யெனப்படைவழங்குரையலென்னமுருகன்.......(கூகூ)

மானமேலெழமடங்கன்முகனுயிரநெடுங்
கூனல்வான்சிலைகுடங்கைகொடுவாளிசொரிய
ஞானநாயகனகைத்தொருகைநாட்டுசிலையா
லூனமாகவருகோல்கணையறுத்தினன்மிக...............(க00)

மீட்டும்வெய்யவன்விடுந்தொறும்விராவுகணைகள்
வீட்டியன்னவன்விறற்சிலைவிளங்குதுவசஞ்
சேட்டுமாமணிமுடித்திரள்செறித்தகவய
மோட்டுபாகிரதம்யாவையுமறுத்துரறினுன்..............(க0க)

மாமடங்கன்முகன்வஞ்சினமுரைத்துவெகுளாத்
தோமரங்குலிசமாதிகடுறுத்துமர்செய்தா
ஞமனைத்தையுமடர்த்தமரர்தொல்படைகளு
மேமமின்றியறவென்றனனிராறுபுயனே................(க0உ)

இரண்டுபோணிசிரமொன்றுதகவேனையசிரந்
திரண்டகைத்தொகுதிதீர்ந்தவன்விசாகனெதிர்போய்
முரண்டிகழ்ந்தவிதுவல்லையெனின்முன்னுதியெனத்
திரண்டதண்டமொருகைக்கொடுசினந்தணவினான்......(கo௩)

வல்லையேலெனவுரைத்தமைமதித்துமுருக
னல்லவேற்படைவிடுத்திலனகைத்தொருகரம்
புல்லுவச்சிரம்விடுப்பவவன்போர்க்கதையினை
யொல்லைநுண்டுகள்படுத்துயிருமுண்டததுவே..........(கoச)

ஆயிரந்தலையிரட்டியுறுமங்கையிளவன்
மாயிருஞ்சமருழந்துயிர்மடிந்ததறியாக்
கூயிரங்கியொருசூரனுயிர்கொண்டுவலிகொண்
டேயிரங்குவதுமாங்கொலெனவெண்ணிமுனைவான்....(கoரு)

வேறு.

இந்தவண்டவரைப்பினேழ்தலையிட்டவாயிரவண்டம்வாழ்
வெந்திறற்படைவீரர்சாரவிளம்புவீரெனவிண்டனன்
றந்தைநன்றெனவொற்றரோடினர்சாற்றயாருமிறுத்தன
ரந்தரம்புவிவேலைமாதிரமற்றவெற்றிடமாதலே................(கoசு)

வந்துமுந்தியிறுத்ததானவர்வாய்தன்முட்டிநெருங்கிமே
லிந்தவண்டநெடுஞ்சுவர்ப்புறனெல்லைமுற்றுறவீண்டலி
னந்தவந்தவகன்றவண்டமிருந்துளாரங்கிருந்துளார்
முந்துதானவர்வாய்தல்விட்டபின்முன்னுவாமெனவுன்னியே(கoஎ)

சிங்கமாமுகனொத்தவாண்மையர்சிற்சிலாயிரர்தாரகப்
பைங்கண்வேழமுகத்தனொத்தவர்பற்பலாயிரர்மைந்தனும்
வெங்கதிர்ப்பகையாற்றல்கொண்டவர்வேறுவேறுபல்லாயிர
ரங்கிமாமுகனொத்தவீரரனேகர்தானவர்தானையுள்............(கoஅ)

முக்கண்வேழமுனிந்தவேழமுகத்தனொத்தவரெண்ணிலார்
நக்கன்வென்றகயத்தையொத்திடுகாமவேலினரெண்ணிலா
ரொக்கவண்டம்விழுங்குகொக்கினையொத்தநோன்மையரெண்ணிலார்
மிக்குயர்ந்தசலந்தரப்பெயர்வீரனொத்தவரெண்ணிலார்........(கoகூ)

அந்தகாசுரன்முப்புரத்தவராண்மைவிஞ்சுசுராக்கன்வாள்
விந்தைமாட்டியதாரகாசுரன்வெய்யபண்டன்மயிடனென்
றிந்தமானவராதியாமெறுழாளரொத்தவரல்லது
மைந்துதாழ்ந்தவரில்லையில்லைமலிந்ததானவர்தானையுள்........(ககo)

அங்கணங்கணுரைத்தவண்டமடுத்தவேதர்கணுரணர்
தங்குவச்சிரரும்பர்மாதவர்தங்களாற்றலழித்தவர்
நுங்கிடாதவரத்தர்மாயைநுனித்தறிந்தவர்விஞ்சையிற்
சிங்கிடாதவர்மன்னவர்க்குயிர்செத்துநன்றிசெய்சிந்தையோர் (கககூ)

ஆயவாயிரமாயிரங்கரமாயிரஞ்சிரமந்தமா
மேயவாக்கையர்வேங்கைமாமுகர்வேழமாமுகர்யாளியோர்
சீயமாமுகரெண்குமாமுகர்சிம்புண்மாமுகர்வன்பகை
மாயவாடமர்செய்யுமேழகவன்முகத்தருமெண்ணிலார்.......(ககஉ)

## வேறு.

மடங்கரியதானவர்கண்மல்குதலைநோக்கி
யிடங்கழிகொள்வாருளர்கொலெம்மவரினென்று
வுடங்கமரர்புள்ளுருவமாகியொழிவுற்றார்
தடங்கிரிமுழைத்தொகுதிசார்ந்தயர்வுயிர்த்தார்....(ககங)

பூதர்கணடுங்கினர்கள்பூதர்தலைவோர்கள்
வேதனையுளத்திடைமிகுத்தனரிலக்க
ராதபுதல்காண்டலரிதென்றுளமயர்த்தார்
நாதனுளனென்றுநவவீரர்வலிகொண்டார்.........(ககச)

இத்தகைமையாதுமிறைநோக்கிநகைசெய்து
தத்துபரிபூண்டசகடத்தைநொடிமுன்ன
ரெத்திசையுமேகவினிதூர்கவெனவிண்டா
னத்தனுரைகொண்டுவெளியங்கனமுகைத்தான்.....(ககரு)

மண்டிலமுறுத்தமணிவையமிசைநின்றே
யண்டர்தொழுமாறுமுகனம்புபலகோடி
கொண்டொருதொடைக்கமைதிகொள்ளவமர்செய்தான்
மிண்டியமராடல்புரிவெய்யவர்கடம்மேல்.........(ககசு)

ஒறுத்தனபொலஞ்சகடொறுத்தகவிகைக்கா
டறுத்தனமுடித்தலையறுத்தனவெறுழ்த்தோ
ளிறுத்தனபகட்டுரமிறுத்தனகழற்கால்
கறுத்தவுணராவிகளைகந்தன்விடுவாளி..............(ககஎ)

பக்குவிடுகீரனபசும்பொன்மணிமக்க
ளொக்கலிவையேயலவுடம்புமுடலின்கட்
டொக்குறுமுறுப்புமறிகென்றுதுணிவித்த
புக்கவுணராவிகள்புயக்குமிறைவாளி..............(ககஅ)

தீவினையரேனுமிறைசெங்கையயிலம்பாற்
சாவவரமாற்றினர்கடானவர்கடம்மூட்
சாவுறலைவாளிகொடுதள்ளவடவைக்கட்
பூவுலகினேற்றனர்கள்போரவுணர்சில்லோர்......(கககூ)

மக்களுமிவர்க்குதவுமார்க்கமிலராவ
ரிக்கொடியரைக்கதியினேற்றுதுமெனத்தான்
புக்கதெனவேள்பகழிபோரவுணராக்கை
மிக்குலவுகங்கைநதியாதியிடைவீழ்க்கும்............(கஉ0)

குய்யகவுலோகர்மகிழ்கொள்ளவவனுய்க்கு
மையநெடுநேமிவரையப்புறமிருந்து
நையலகையாதிநவையோர்க்குமிரையாக்கு
மெய்யன்விடுவாளியுயிர்வீத்தசுரர்காயம்...........(கஉக)

எண்டிசையுமண்டலமுமீண்டினரையுண்டு
விண்டலமிடைந்தவர்தம்வெவ்வுயிரைமாந்தி
யண்டம்வளர்பித்திகையினப்புறமலிந்த
கண்டகரையுங்கடிதயின்றகுகன்வாளி............(கஉஉ)

ஒளிதழுவிநின்றவரையண்ணலெனவுன்னு
திளையரெனவெள்ளினவரின்னுயிருநீப்பர்
தெளிமினெனயாவரையுந்தேற்றுவனபோன்ற
வளியிலரையட்டுலவுமாறுமுகன்வாளி.............(கஉங)

திண்ணியபடைத்தகுவர்தேகமுழுதட்டு
வெண்ணிணமளைந்துகறைமெய்முழுதுமாடித்
துண்ணெனவெழுந்துசுடர்வாளிதுரிசோவ
வண்ணவரைதோறுடலுசாவுவனமாதோ..........(கஉச)

சிறுபடையரேனும்வலிமிக்கவர்சினந்தா
லுறுபடைகளாற்றுவதுமுண்டுகொல்சமர்க்க
ணறுமுகனொருத்தனொருகைச்சிலையினம்பான்
முறைமுறையிறுத்தபடைமுற்றுமுயிர்மாய்ந்த....(கஉரு)

பாதகருடற்பரிசமான்பழிதீரக்
காதலொடுமாடுவகடுப்பமுருகேசன்
கோதைபயில்வார்கணைகள்கொங்குகமழ்கங்கை
யோதமுதலானபலதீர்த்தமுமுறந்த...............(கஉசா)

## வேறு.

இறுத்ததானைகளிறந்தபினெங்குநெய்த்தோரு
ழுறுத்தபல்வகைத்துணிகளுமழனும்வானளவும்
வேறுத்திடங்கெடவித்தகனேக்கினனகைத்தா
னுறுத்தமுப்புரமெனத்தழலுண்டுநீற்றியதே..........(கஉஎ)

தடைபட்டப்புறத்திருந்தவர்தடைதபுதலுமே
மிடைதலுற்றனர்வெடிபடமுழங்கிமுன்போல
வடைதலுற்றவர்தம்மையுமறுத்தண்டவழிவிற்
படையினேர்கணைதொடுத்தனனடைத்தனன்பகவன்....(கஉஅ)

அனைத்துந்தானைகளிறந்தமையவுணர்கோன்பாரா
நினைத்தல்செய்குவானின்மலன்வரமிருப்பதனு
லெனைக்கொல்வாரிலையிளையவன்றன்னையான்வென்று
வினைக்கண்வீழ்ந்துளாரையுமெழுப்புவலெனவெகுண்டான்..()

விரைந்துதேரினைச்செலுத்திமேலடர்ந்தனன்பூதர்
வரைந்தபூதர்தந்தலைவர்களிலக்கர்வன்வீரர்
நிரந்துவேறுவேறுடமர்விளைத்தனர்நீங்கக்
கரந்தைவேய்ந்தவன்கான்முளைகடுகத்தேருகைத்தான்...(கநo)

இருவருஞ்சிலைவாங்கினரெறுழ்க்கணைதொடுத்தார்
பொருதுமாதிரஞ்சுற்றுவர்கடற்றுறும்புகுவார்
கருவிவானெனவிசும்பிடைத்தோற்றுவர்கரப்பா
ரருவிமால்வரைதொறுஞ்சமராற்றியேயடுப்பார்........(கநக)

மண்ணிற்கீழுலகனைத்தினுமரீஇச்சமருழப்பார்
விண்ணிற்பல்வகையுலகமும்விராய்ப்படைதொடுவார்
துண்ணென்றின்னணமமர்த்துழிச்சூரன்மேலண்ட
வண்ணவாய்த்தலைவழக்கறவடைத்தமைகண்டான்.......(கநஉ)

இளையன்சூழ்ச்சியுமென்னென்பதெனக்கனன்றங்கை
வளைவில்வார்கணைபன்முறைதொடுத்தனன்வாய்தல்
வெளிகண்டப்புறத்திருந்தவர்தங்களைவிளித்தான்
றெளிவிலான்செயலறிந்தனன்றேவரைப்புரப்போன்...(கநந)

செங்கைவைகியபடைகளுட்சிலபடைநோக்கித்
தங்குமாயிரத்தேழெனுமண்டமுஞ்சாரா
வங்கணங்கண்வைகியவரட்டர்களுயிர்மாந்தி
யிங்கண்வம்மினென்றியம்பினனப்படையெழுந்து.....(கநச)

வேறுவேறுபல்லுருக்கொடுவிரைந்துபோய்விசாகன்
கூறுமாயிரத்தேழெனுமண்டமுங்குறுகி
நீறுசெய்துவல்லவுணரைமீண்டுசின்மலன்கை
யேறிமுன்புபோலிருந்தனவிதுகண்டுசூரன்............(கரு௫)

ஆங்குநின்றறைகூவிப்போயப்புறத்தண்டத்
தோங்கினனுடனேகியங்குடன்றமர்புரிந்தான்
காங்கெயன்கடுஞ்சூரனம்முறையண்டந்தோறு
நீங்கினனுடனேகினனிமலனும்பொருது.................(கரு௬)

அண்டமாயிரத்தெட்டினுமவுணர்கோனுழைய
விண்டிடாதுடன்புகுந்தமர்விளைப்பதும்வியப்போ
மண்டுமாருயிர்க்குயிரதாய்வதிந்தண்டந்தோறுங்
கொண்டுகொண்டுசெலொருமுதலாகியகுமரன்.........(கரு௭)

கந்தவேளுந்தனுடன்வரச்சிலபகல்கழித்திட்
டிந்தவண்டம்வந்திறுத்தனன்மாயைசூழ்ச்சியினு
லந்தமில்லதோரமிழ்தமந்தரமெனுமடுக்கல்
வந்திடுந்திறமியற்றினன்மாண்டவரெழுந்தார்.........(கரு௮)

தம்பிமைந்தர்கடானவத்தலைவர்தானவர்க
ளும்பரச்சுறவணைவருமொழிவின்றியெழலுங்
கம்பமற்றிடுஞ்சூரன்மிக்குவகையிற்களித்தான்
வம்புமுற்றியகனவிதென்றுள்ளகமதியான்.............(கரு௯)

முருகவேளதுநோக்கினன்முறுவ்லித்தங்கை
யொருபடைக்கலமுகைத்தனனுரையெழுமுன்னர்ப்
பொருதநின்றதானவர்களைப்பொருப்பொடும்பொடித்த
தருளிலாதவன்யர்ந்தனனுற்றினன்மாயை................(க௪0)

எண்ணின்மாயையுமெதிர்நிலாதழிதரவீற்றின்
வண்ணமாமரமாயினன்வஞ்சகன்மணிவே
லண்ணலேவினனதுகிழித்தந்தரப்புனலின்
மண்ணிநீளுடன்முன்புபோன்மலர்க்கைவாழ்ந்ததுவே...(க௪க)

இருதுணிபடக்கிடந்தவனெழுந்துகுக்குடமும்
பொருவின்மஞ்ஞையுமாய்ச்சமர்க்கெதிர்ந்தனன்புனிதன்
வருகவென்றருள்விழிக்கடைவழங்கினன்மலம்போ
யருணிலைக்கிலக்காயினவாங்கிருபுள்ளும்................(க௪௨)

சேவல்வண்கொடியுயர்த்தினன்சிறைமயிலூர்ந்தான்
மூவர்தம்முதலாகியமுக்கணன்புதல்வன்
றேவர்பூமழைசொரிந்தனர்தேவர்தஞ்சிறையை
நீவிவிண்குடியேற்றினனிலத்திடைமீண்டான்..........(கசரு)

கமலம்பூத்திடத்தீர்த்தமொன்றகழ்ந்துபேரூரி
னமிழ்தலிங்கத்தினருச்சனைபுரிந்துசென்றமரர்
தமதுவைப்பெனப்போற்றுறுமருச்சுனச்சயிலங்
குமரநாயகனமர்ந்தனன்குவலயம்போற்ற...............(கசச)

மருதவெற்பிடைவதிதருமுருகனைப்பணிவோர்
பொருவிலன்னவன்புகழ்களைக்கேட்பவர்தாமு
மொருவிவன்பகைவெறுக்கைபெற்றும்பராயீற்றி
னருளொடுங்கலர்நானந்தத்தவசராய்த்திளைப்பார்.......(கசரு)

அங்கண்மாநிலஞ்சுமதியென்றறையுநான்மறையோன்
பொங்குதீவினைபுரிந்தவன்புரையில்வான்கதியிற்
றங்கினனெனினதிமாபுரத்திடைத்தவத்தா,
னங்கணுதனைநாடுவார்க்குறுததுமூளாதோ................(கசசு)

என்றுகூறலுமுனிவரர்சூதனையிறைஞ்சி
நன்றுகூறினையுய்ந்தனநவைபயில்சுமதி
யொன்றும்வான்கதியுற்றனனென்றனைவிளங்க
மன்றவோதுதியெனவெதிர்வழங்குவன்சூதன்..........(கசஎ)

மருதவரைப்படல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - க0எ0.

உ

# சுமதிகதிபெறுபடலம்.

பங்கயப்பொய்கையுகளும்பருவரால்பாய்ந்துமுட்டத்
துங்கக்கமுகின்மடறுமியப்பைங்கனிகள்சொரியாநிற்குந்
தெங்குமிடைந்தமகாராட்டிரமென்னுந்தேயந்தன்னிற்
றங்குமறையோனொருவன்றரும்பெயர்மற்றெச்சதேவன்....................(க)

அன்னனெடுநாளருந்தவங்களேச்சங்களாற்றிமுக்கண்
முன்னோனருளான்மனைக்குரிமைபூண்டமுகிலன்னகூந்தன்
மின்னேரிடையாண்முலைகறுப்பக்கண்குழியவிளர்ப்பமாமை
நன்னாளிடையேயுயிர்த்தாளொருமைந்தனகர்கொண்டாட...................(உ)

தமர்களுடன்மகிழ்ந்துதாதைசடங்கனைத்துந்தகவினாற்றிச்
சுமதியெனுநாமமிட்டழைத்தான்றோன்றலுமப்பெயருக்கேற்பத்
திமிலமறைபயின்றுதெள்ளிப்பலகலையுஞ்சீலமாதி
யமைதிபெறவொழுகியாறடுத்தவொருபதாண்டாயுளுற்றான்..................(௩)

தெய்வமறையோன்சிவதாமாவென்றொருவன்சீர்சால்கற்பின்
றையன்மனைவிவயிற்றுதித்தபேரழகின்றனையைதன்னை
யுய்யுநெறிபலவுமுள்ளானிவற்களித்தலூழாமென்று
கையினறும்புனலோடீந்துகடியயருங்காட்சிகண்டான்........................(௪)

திமிரப்பிழம்பைத்தெளித்தெடுத்துவார்த்தனையதெய்பெய்கோதைக்
குமரிநலன்முழுதுங்கூட்டுண்டுவாழுநாட்குமரனான
சுமதியெனும்பெயரான்றோடவிழ்ந்தகொன்றையந்தார்த்தொல்லோன்கோல
மமரர்தொழும்விழவுநோக்கப்பருப்பதத்தையடைதலுற்றான்.................(௫)

வேறு.

மல்லிகார்ச்சுனமால்வரைநாயகன்
புல்லம்வார்கொடியேற்றிப்புவிதொழச்
செல்லுநல்லதிருவிழவின்வள
மெல்லியும்பகலுந்தொழுதேத்துநாள்...........(௬)

அமிழ்தந்துய்க்குமமையத்துப்பித்துறீஇ
யுமிழ்தல்செய்துவிடத்தையுண்டாலெனக்
குமிழ்தருங்கொடிநாசியொருத்திபா
லிமிழ்தரும்படியெய்தியவூழினால்................(௭)

வீதியின்வளநோக்கவெளிக்கொடு
போதுவான்கவினாற்பொலிவுற்றொரு
மாதர்வீதிவளங்கண்டுபுக்குழி
யாதவன்கதிராலயர்வெய்தினான்................(௮)

பந்தர்நீண்டுபணிப்புதுநீருகுத்
திந்திரன்புரமெய்தியதாமெனச்
சுந்தரங்கடொகுத்ததொர்மாளிகை
முந்துறக்கண்டுமுன்கடைநண்ணினான்..........(௯)

மணமுஞ்சீதமும்வெளவிச்சிறுவளி
யணவிவெப்பமகற்றவயர்வுயிர்த்
துணர்வுமீக்கொளுவகையனாய்மனைப்
புணர்கின்றார்திறங்கேட்கப்புகன்றனன்.........(௧௦)

மழைதவழ்ந்தெழுமாளிகையின்னதிற்
றழைவளத்தொடுதங்குகின்றூர்தமை
விழைகின்றேற்குவிளம்புதியென்றன
னுழைநின்றுெருவன்கிளப்பானரோ..........(கக)

வேறு.

திருந்தியவிந்நகர்த்தேத்துச்சீர்மிகுந்
திருந்திடமந்தணரிருக்கைநாப்பணே
பொருந்தியவாழ்க்கையோர்புனிதவேதிய
னருந்தவத்துயிர்த்தவளழகினெல்லையாள்......(கஉ)

பொன்னுளிதிகழ்தருபொருவின்மாமையான்
மன்னுமேமாங்கியென்றுரைக்குமாண்பினு
ளன்னவளிந்நகரமர்ந்தவாழ்க்கையோர்
தொன்னெறிவேதியன்றுணைவியாயினுள்......(கங)

இடைநிலநாடொறுமினைந்துதேய்தரப்
புடைபரந்தெழுந்தபூண்முலைகள்போர்மதன்
கொடைபயிலிருநிதிக்குப்பையாமென
நடைபயின்மங்கையாம்பருவநண்ணினுள்......(கச)

நாண்மடமச்சநற்பயிர்ப்புத்தோட்டியு
மாண்மைசெய்பாகனுமணியுந்தூசமு
மேண்மலிநிகளமுமிரியக்காமமா
மாண்மதம்வீறலின்வரம்பிகந்தனள்............(கரு)

குருகுகைப்புழைக்கையால்வளைத்தக்குஞ்சரம்
வருமுலைக்கோட்டினுன்மார்பழுத்துபு
மருமலியுவளகவனத்திலாடவர்
திருவெனுங்கவுளம்வாய்தெவிட்டிச்செல்லுமே.(கசு)

மங்கையிற்பெருங்கவின்மருவலான்வளை
யங்கையாளுகியவணங்குக்காற்றல்வீழ்
துங்கமாதவரெனத்துறந்துளோருளு
மிங்கிவள்விழிவலைக்கிடர்ப்படாரிலை............(கஎ)

தந்தையேயாகநற்றமையனுகவச்
சுந்தரிவிழிவலைத்துவக்குண்டானெனிற்
பிந்துறவருவனவருகெனுப்பிழைத்
தந்தின்மென்முலைதழாதகறற்பாலனே.........(கஅ)

புனையிழையிவள்செயல்புனலொடேற்றவ
னனைவரும்புகற்ரவறிந்தும்பன்முறை
மனைவயிற்கண்டுமென்மரபுகுன்றிற்றென்
றினைபவன்கோறலையெண்ணினனரோ.........(கக)

கோறலுக்குடன்படுங்கொண்கன்செய்தியைத்
தூறலுக்குடன்படுந்துணைவிமுன்றெரிந்
தாறலைத்திருநிலத்தடக்கிப்பொன்னினும்
வேறலைச்செய்தனள்வீத்தவெம்பழி...........(உ0)

நாண்டகுமறையவர்நல்லசேரியின்
வேண்டியாங்கொழுகுமவ்வினைமுற்றுமையின்
மாண்டகுபரத்தையர்வாழிவ்வீதியிற்
காண்டகுமிம்மனைகவினச்செய்தனள்..........(உக)

அரத்தகச்சீறடியருப்புக்கொங்கையாள்
பரத்தையர்தொழிலெலாம்பயின்றுகாளையர்
வரத்தினையேற்றிவண்வதிகின்றுளென
விரித்தனனிதுவினுயிருக்கும்வேலையில்.........(உஉ)

பரியகநூபுரம்பாதத்தேங்கிட
விரியொளிமேகலையரையின்மின்செய
வரியளிகுலங்கள்வார்குழலிற்சூழ்தரத்
தெரியிழைமாதராளாங்குச்சென்றனள்........(உங)

சிறுவளிபடர்வழித்தேம்பெய்கோதையி
னுறுமனமெழவுகைத்தொல்கிநின்றனண்
முறுவலித்தொருமுலைதோற்றிமூடின
ணறுமலர்விழிப்படைசிறிதுகாட்டினள்.........(உச)

முறுகியகாதலின்மொத்துண்டாலென
வுறுவளிநாசியினுயிர்த்துச்செம்மலைப்
பெறுவதற்கருந்தவம்பெரிதுமாற்றினேன்
மறுமையுமிம்மையும்வழுவிலேனென்றுள்.....(உரு)

துடித்தனவெனக்கிடத்தோளுங்கொங்கையும்
வடித்தவேல்விழியுநல்வரைப்பிற்பல்லியு
நொடித்தனவிரிச்சியுநுவலப்பட்டன
கடைத்தலைக்குமரநிற்காண்டற்கென்றனள்.....(உசு)

நென்னலின்வைகறைநீங்குமெல்லையிற்
றன்னிகரில்லதோர்தரளமாலிகை
கன்னியென்கரந்தரக்கனவினேனிதோ
நின்னையுய்த்தளித்தனனிமலையென்றனள்......(உஎ)

அயலவர்போற்கடைத்தலையமர்ந்தனிர்
வியன்மனைநுமதியானும்மின்வேறலேன்
பயின்மனையுவளகம்படர்கம்வம்மினென்
றுயிரினுமுரிமைசெய்தொண்கைபற்றினள்.....(உஅ)

வேறு.

ஏமாங்கிவிழிக்கணையோடெழின்மாரனெய்த
வீமாண்கணைபட்டுளமற்றுவிகாரமென்னுந்
தீமாந்தவருந்தியபூசுரன்செங்கையன்ன
மோண்கரத்தாற்றொடச்சோர்ந்தழியாவிபெற்றான்........(உகூ)

உருவத்திடையோங்கியுருக்குமுலைப்பிணையக்கும்
பருவத்தொடுநெல்குமருந்துபல்கோடியுள்ள
புருவச்சிலைகோலிவிழிக்கணைபூட்டிமாதர்
வருவித்திடுநோய்க்கவரல்லதுமற்றுமுண்டோ.............(௩0)

விண்ணோங்கிவளர்ந்தபருப்பதமீதுநெற்றிக்
கண்ணோங்கியநம்பன்விழாக்கவின்கண்டபேறே
பண்ணோங்கியமென்மொழியாள்கரம்பற்றிற்றென்ன
வெண்ணோங்கியநெஞ்சொடெழுந்துடனேகினனே........(௩க)

மலர்மெல்லணைமாதொடும்வைகினன்மாதினேவ
லலர்மென்குழலார்சிலர்சாந்தமலங்கன்மாலை
பலவுங்கொடுமுன்னுறவேந்தினர்பைம்பொன்ங்கி
குலவுஞ்சுமதிக்கணியாக்கினடானுங்கொண்டாள்.........(௩உ)

வேறு.

மாடகத்திவவுநல்லியாழ்மதுரமெல்லிசைகாதூட்டிப்
பாடகத்தளிர்மென்பாதப்பைங்கிளியரியலூட்ட
வாடவர்திலகமன்னனநங்கவேள்சரங்கள்பாய
வோடரித்தடங்கணங்கையுருவினைத்தழுவிக்கொண்டான்..(௩௩)

தாதியரெழினிவீழ்த்துத்தணந்தனர்புறத்துப்போத
மாதினையிடப்பான்முன்கைவலக்கையிற்சாய்த்துப்புல்லிப்
போதிவர்கூந்தல்சோரப்புணர்முலைவருடிப்பின்னிச்
சோதிவெண்டரளச்செவ்வாய்ச்சுவையமிழ்தாரத்துய்த்தான்()

ஓதியுநுதலுநீவியோடரிக்கடைக்கணக்கிச்
சோதியகவுள்கைமூலமாதிகள்சுவைத்துக்கொங்கை
யாதிகள்புடைத்துக்கிள்ளியங்கையாற்பிசைந்துதாள்க
ணீதியினல்குன்மாட்டுநிகழ்த்துவபலவுஞ்செய்தான்......(ருரு)

மூடிகமயூரபாதமுழுமதிபாதித்திங்
டோடவிழுற்பலாதித்தொகுகுறிநகத்தாற்பல்லாற்
பாடுறத்தோற்றிப்பூரைபன்னகங்குக்குடாதிப்
பீடுறுகரணபேதநாடொறும்பிறங்கச்சேர்ந்தான்..........(ருசு)

அறிந்தவரொருவரில்லாவயனகராதலாலே
பறிந்திடநாணுஞ்செய்யும்பற்பலவொழுக்கும்விட்டுச்
செறிந்தொருநலத்திற்றனுந்தெரிவையுமொருங்குதுய்த்துப்
பிறிந்திலனுகிக்காமப்பித்தினிற்பெரியனுனன்.............(ருஎ)

இன்பமுஞ்சுமதிதன்பாலின்பமுஞ்சமமாக்கொண்டும்
பொன்பலவணியுமற்றும்புகழொடுமறிவினேடுந்
தன்பரமாக்கிக்கொண்டுதபணியமில்லாரென்மாட்
டன்பினராயினென்னுமகல்கென்றுள்வளரேமாங்கி......(ருஅ)

இளமையேகவினேகீர்த்தியெறுழ்கலையிங்கிதத்தின்
வளமையேயுன்பேநல்லவருணமேயேகபோகம்
விளைவுசெய்திறனேமற்றுமிக்குளரேனும்பொன்னிற்
றள்ர்வினராயினஞ்சேயிருமனத்தையலார்க்கு.............(ருக)

இருமனப்பெண்டுங்கள்ளுமேமமாந்திருவைநீக்குங்
கருவியென்றறிஞரஞ்சக்கலங்கனர்சுமதியெய்திப்
பொருவிறன்றுதையாஞேன்புரோகிதவுரிமைபூண்ட
வெருளறுகாசுமீரகண்டத்துவேந்தைச்சார்ந்தான்..........(சo)

தெரிவுறுகுரவன்மைந்தன்றேம்பியவறுமைநோக்கி
யெரிமணிக்கலனுந்தூசுமிரணியக்குவையுநல்கி
யுரிமைசெய்தரையனேவவொய்யெனமீண்டுகாளை
வரிசையினெடுமேமாங்கிவளமனையகத்துப்புக்கான்........(சக)

என்னுயிர்வந்ததோவென்றெதிர்கொடுவணங்கியென்னே
முன்னர்யானசதியாட்மொய்பொருட்கேகலாமோ
வன்னதுங்கவலையின்றியாடுதற்கேதுவென்றே
பின்னுறத்தடாமைநின்றேன்பெருமவந்தனையேயென்றாள்.....()

நகையினுனல்லவல்லநவிற்றினும்பெரியோர்மாட்டுத்
தொகைபடுமின்னனம்பாற்சூழ்வதொன்றன்றேவென்று
தகையெழில்வாடுவேற்குன்றுமரைமுகத்தைக்காட்டி
யிகைவளமளித்தாயுய்ந்தேனென்றனள்விழிநீர்வாக்கி......(சஙு)

பருகுவதன்னகாமர்ப்பைந்தொடிபொய்மெய்யாக
வுருகினன்வருந்தலென்னுவோடரித்தடங்கணின்றும்
பெருகியபுனலைத்தானைப்பெட்பொடுங்கரங்கொண்டொற்றி
முருகியகூந்தல்பின்னிமுன்புபோலிருந்தான்சின்னுள்......(சச)

பூவிரைச்சாந்தமாதிப்பொருள்கொளாதொழிதுமேனு
மாவியினன்னகாளாயமுதுணுதிருத்தலாமோ
நீவிரைந்தளித்தயாவுநீங்கினவென்றேமாங்கி
யோவியம்வாய்விண்டென்னவுரைத்தனள்சுமதிகேட்டான்...()

கரவிலர்தம்மைச்சார்ந்துகாஞ்சனமிரந்துநல்கி
விரவினன்சின்னுட்பின்னர்விடலையரோடுஞ்சென்று
பரவுமுற்கலதேயத்திற்பகர்பர்க்கதேவனில்லி
னிரவிடைப்புகுந்துசெம்பொனுதிகளெடுத்தானன்றே...(சசு)

எடுத்திடுமரவங்காதினெய்தலும்விழித்துப்பார்ப்பா
னடுத்தனர்கள்ளர்கூவென்றகத்திடைத்துயில்கின்றுரைப்
புடைத்தனனெழுப்பவல்லேபூசுரன்றலையைவீட்டி
மடுத்தபல்பொருளினேடுமீண்டவண்மனையைச்சார்ந்தான்.சஎ

உடங்குபோய்மீண்டதூர்த்தருயிர்க்கொலைபுரிந்துபாவந்
தொடங்கியசுமதிக்கன்றுதுராசாரனெனும்பேர்நாட்டி
விடங்கனிவிழியினுட்கும்வெங்கொலைகூறவன்னுள் [டாள்.
குடங்கையிற்செவிகள்பொத்திக்குழைந்துளத்திதனைக்கொண்

வேறு.

கைதவமிழைத்தலுங்களவுசெய்தலு
மைதுயிர்கோறலுமறத்தைக்கோறலும்
பொய்தவவுரைத்தலும்பொருளிழத்தலு
மெய்தியகாமத்தினன்றியில்லையே.............(சகூ)

நன்றியைக்கோறலுநலனைக்கோறலும்
வென்றியைக்கோறலும்விவேகங்கோறலுந்
துன்றியவொக்கலைத்துறந்துநிற்றலுங்
கன்றியகாமத்தினன்றியில்லையே...............(ருo)

பகையினையாக்கலும்பாவமாக்கலு
நகையினையாக்கலுநவையையாக்கலுந்
திகைமனமாக்கலுஞ்சிறுமையாக்கலு
மகைதருகாமத்தினன்றியில்லையே................(ருக)

பிணிபலதுறுத்தலும்பேதுசெய்தலுந்
துணிதருபெரியவர்தொடர்புநீங்கலுந்
தணிதருசிறியவர்சார்புண்டாகலு
மணிதருகாமத்தினன்றியில்லையே................(ருஉ)

உயிரினுமோம்பிடத்தகுவயாவையு
மயர்வுசெய்தயர்வுசெய்தொழிக்கத்தக்கதாய்ச்
செயிரினயாவையுஞ்செறிக்கவல்லதாய்ப்
பயிலியகாமநோயஞ்சற்பாலதே..................(ருஙு)

வருணமுமொழுக்கமுமல்லற்கற்பொடு
மொருவியன்பணைச்செகுத்துலப்பிறீங்குமுன்
மருவினமின்னுநம்மாட்டுள்ளரினும்
வெருவுறுகொலைப்பழிமேவற்பாலதோ..........(ருச)

என்றுளத்தெண்ணியேமாங்கியன்புமிக்
கொன்றியசுமதியையொழிப்பமற்றவன்
றுன்றியபெருநிதித்தோற்றங்காட்டினிம்
மன்றலங்குழல்வயமாமென்றெண்ணினன்.....(ருரு)

தேங்குநீர்மாள்வதேயத்தெய்தின
னுங்குமோரந்தணனுவிமாற்றினன்
வீங்கியபொருளொடுமீண்டுசென்றுவிண்
ணோங்குமேமாங்கிவாழுறையுளண்ணினன்......(ருசு)

தேவரும்விழைதகுந்திருவன்னளிவ
னீவவுநீங்கலனீண்டவிங்ககர்
பாவியின்பொருட்டுநாம்பற்றியப்புறம்
போவதேகடனெனப்போயினளரோ............(ருஎ)

பிரிவுறுமன்றிலிற்பேதுற்றன்னவன்
றெரிவையைக்காணுவான்றேடிச்செல்வுழிக்
கரிபலதிரியுந்தென்கைலையெல்லையின்
விரியிணர்க்கானிடைவிழுந்துமாய்ந்தனன்.......(ருஅ)

பருப்பதந்தாழ்ந்தவப்பரிசின்வெள்ளியம்
பொருப்பயலிறந்தவன்புலாலுடம்பினை
விருப்பொடுநாய்நரிமிசையவீர்த்துப்போய்த்
திருப்பொலிகாஞ்சியந்தீர்த்தத்திட்டவே.........(ருக)

ஆதியம்புரத்திடையாக்கைவீழ்ந்ததும்
போதிவர்காஞ்சியம்புனலிற்றோய்ந்ததுங்
கோதினைமுழுவதுங்குமைத்தச்செம்மலைச்
சோதிதன்சிவபுரச்சூழல்சேர்த்தவே..............(சுO)

வேண்டியபோகங்கள்வேண்டியாங்குறீஇ
யாண்டகைச்சுமதியங்கமர்ந்துவாழ்ந்தன
னீண்டியதீவினையிடைவிலங்கினு
மாண்டநல்வினையினர்வரத்திற்றாழ்வரோ.........(சுக)

வசுகுந்தப்பகைஞரைமறுக்கும்வாயுறீஇப்
பசுகுந்தங்கரத்தொசித்திட்டபண்ணவன்
சிசுகுந்தவிழியினர்க்கென்னுந்தேசுற
முசுகுந்தனென்பவன்முறையிற்பூசித்தான்......(சுஉ)

அவையகத்துறுபழியகற்றவேண்டினு
நவையயிறீவினைநசிக்கவேண்டினு
மெவையெவைவேண்டினுமீயவல்லதே
கவைபயில்போதிசூழ்கைலைமாநகர்..............(சுஙு)

என்றுரைகிளத்தலுமிறைஞ்சிமாதவர்
கொன்றையஞ்சடைமுடிக்குழகற்கன்புசெய்
நன்றுயர்முச்குந்தனடையெலாம்விரித்
தொன்றுறவுரையெனவுரைக்குஞ்சூதனே.........(சுச)

சுமதிகதிபெறுபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ககஙுச.

உ

# முசுகுந்தன் முகம்பெறுபடலம்.

வள்ளவாய்நறுங்கமலமதுவுண்டகளிவண்டின்
றெள்ளுதீஞ்சுவைப்பாடறிசைதிசையுமெழூம்பொய்கை
கள்ளறுப்பொழில்புடைசூழ்கலிங்கதேயத்தொருவன்
றுள்ளுமான்மறிக்கரத்தார்துணையடிப்பூசனைபுரிவான்..............(க)

மறைமுழுதும்பயின்றுணர்ந்துமறைமுடிவுக்கெட்டாத
பிறைவளருஞ்சடைமுடியார்பெய்கழற்சேவடிமறவா
நிறைதருகாதலின்மறையோனெடுந்தவத்தாலொருபுதல்வி
யறைதருமற்றவன்மனைவியகட்டிடைவந்தவதரித்தாள்..........(உ)

சடங்கனைத்தும்விதியாற்றுற்றகத்தாதையிதத்தொழிலே
தொடங்கவருமகட்கியற்றிச்சுகுமாரியென்றழைத்தா
னடங்கவருநல்வினையினங்குரம்போல்வளர்காலை
மடங்கழுவும்பண்டுபுரிமாதவத்தின்பயனணைய...................(ங)

தகுமாறிதன்றெனவேசகத்தினர்தம்வாழ்க்கையினை
நகுமாறிராறிரட்டிநவைவளர்த்துவமயக்க
முகுமாறியானையுரித்தவரடிப்பூசனைபுரியச்
சுகுமாரிதாதைகழறெழுதிரந்தாளவன்மகிழா.....................(ச)

திரும்பியளற்றழுந்தாமந்திரவதிகாரங்கொடுத்துக்
கரும்புநுனிதொடுத்தீருந்துங்கடப்பாட்டினினித்ததற்பின்
விரும்புமருச்சனையதிகாரங்கொடுத்தான்விழைந்தேற்றுச்
சுரும்புளருநறுங்கோதைச்சுகுமாரிபணிபுரிவாள்.................(ரு)

வேறு.

கனைகடன்முகட்டிற்கதிரவனெழுமுன்கடிகையோரைந்தெனவிழித்துத்
துனையமெய்ச்சுத்திகூடியதியற்றித்தூயவெண்ணீறுநன்கணிந்து
வினைமுழுதகற்றுஞ்சதாசிவனுருவம்விளங்கவுள்ளத்திடைநினைந்து
மனையதன்புறம்போயியக்கமோரிரண்டுமரபுளியொருவிக்கோறின்று.......(சு)

கந்தமிக்கரும்புமலர்த்தடம்படிந்துகமழ்ந்தவெண்ணீறுடல்வயக்கிச்
சுந்தரமிகுந்தநந்தனவனத்துத்தூத்தகுபிடைகைகொண்டேகி
நந்தியாவட்டமலரிமந்தாரஞாழலுகம்வழைவகுளங்
கொந்தவிழ்செருந்திபிண்டிபாதிரிகூதாளஞ்சம்பகங்கன்னிகாரம்............(எ)

பொன்னிணர்க்கடுக்கைசெம்மலர்க்கொன்றைபுன்னைவெட்பாலைசெவ்வகத்தி
நன்னிறவேங்கைகொக்குமந்தாரைநறியபொன்னுவிரைவெட்சி
பன்னுபன்மத்தமாதுளைபட்டிபருத்திசெவ்வரத்தைபொற்காஞ்சி
துன்னியபுரசுகடம்பெருக்கழிஞ்சிறும்பைபன்னீர்திருவாத்தி................(அ)

மராமலர்கரியசெம்பைவெண்டிலோத்தம்வழுதுணைகண்டங்கத்திரிமா
குராமலர்தாளிகூத்தனற்குநம்பைகோட்டம்பூகஞ்சதகுப்பை
யராவணைக்கடவுள்காந்திசேவகன்பூவாத்திகூவிளம்வன்னியறுகு
பராவுசெவ்வந்திநாவல்பூந்துளசிபச்சைவெண்காக்கணம்பூளை...............(கூ)

கருவிளைவெள்ளைக்காசைபைந்தருப்பைகாரைசெங்கீரைநீர்முள்ளி
மருதிருவேலிவேரிலாமிச்சவேர்வெட்டிவேர்மஞ்சணத்தி
பரிதியின்காந்தியெனுமிச்சைநரந்தம்பாரிசாதகம்புலிதொடக்கி
தருவளர்வல்லிசாதகஞ்சங்கவர்த்தனஞ்சந்தனங்கிளுவை..........................(கO)

வெள்ளின்மாவிலிங்கையோரிதழ்க்கஞ்சம்வெண்மலர்நாணலுயுருவி
யெள்ளலர்கொட்டைக்கரந்தைநற்கரந்தையிலந்தைதண்ணீர்மிட்டானெல்லி
யொள்ளியநொச்சிகேதகைவாகையுச்சிப்புல்குச்சிப்புல்காந்த
டள்ளருஞ்சாலிப்பயிர்கருங்காலிதான்றிபூங்குருந்துதாம்பூலம்.................(கக)

மருமருக்கொழுந்துமாதவிமௌவன்மல்லிகைமாலதிமயிலை
முருகவிழ்குளவிகுமுதமென்குவளைமுண்டகநெய்தலும்பிறவுங்
குருமணிக்குழையின்பாங்கியரோடுகொய்துமீண்டகன்மனைகுறுகி
யருவுருவகன்றசிவபரம்பொருளையருச்சனைபுரியுநாளொருநாள்............(கஉ)

வேறு.

தாதுகமழுந்திருப்பள்ளித்தாமங்கொய்யமுன்புபோற்
போதுவிரியுமுய்யானம்புகுங்காற்சுகுமாரியைக்கண்டு
காதுமநங்கன்கணையலைப்பக்காதன்மிகுந்துவிதூமனென
வோதுபெயரான்காந்தருவனொருவனவள்பாலடுத்துரைப்பான்............(கங)

பொன்னனியன்றவோவியமேபோதானியன்றமாலிகையே
மின்னனியன்றபாவையேவேலையெழுந்தசுவையமிழ்தே
யென்னுயிரேநினையடுத்தேனெனக்குமனைவாழ்க்கையளாகி
னின்னல்விழையப்படுபொருள்கணிரப்பிப்பணிசெய்குவலென்றான்........(கச)

கன்னியுரைப்பாள்காந்தருவக்காளாய்போகத்திடையார்வ
மென்னுமிலன்முப்புரமெரித்தவிறைவனடிப்பூசனைப்பத்தி
மன்னுமுடையேனுதலினின்மனையாளாதற்கிசைகல்லே
னன்னர்வனத்துட்புகுந்ததுந்தேர்நம்பற்கலர்கொய்வான்பொருட்டே.....(கரு)

தூயையெனினீயெனையீங்குத்தொடராதுனதுபதிச்சென்மோ
மாயைதொடராப்பரம்பொருட்குமலர்கள்பறிப்பச்சேறுமென
வேயைநிகர்த்ததடந்தோளாய்விழிவேலேவியுயிர்வௌவித்
தீயைநிகர்த்தநெடுங்காமஞ்செறித்தாய்செறித்தாய்செறித்தாயால்..........(கசு)

வாளாதேகல்வழக்கேயோமருந்தாயளிக்குமொருநீநின்
னாளாயொழிந்தேனெனக்கிரங்காயணங்கேயென்றுவிதூமனெதிர்
மீளான்மீட்டுமிரந்தானைவெய்துவிழித்துச்சுகுமாரி
காளாய்கவிபோற்பிடிவிடாய்கவியேயாதியெனச்சபித்தாள்...............(கஎ)

தீயபாலையார்தடுப்பார்தெய்வமகளிர்மனங்கவருங்
காயுவாழ்க்கைக்காந்தருவன்கலையாய்வரைதோறுழிதருங்காற்
றூயதானவிமையவரைச்சூழலணுகிவதிகின்ற
ஞயகாலையொருவைகலமலன்வில்லத்தடியமர்ந்தான்......................(கஅ)

வேறு.

மைம்மெழுகியன்னமுகமாமுசுவெழுந்து
கைம்மிளிர்கனற்கடவுள்காமுறவிருந்த
வைம்முளணிகூவிளமரத்துகளவல்லே
பைம்மிளிரிலைச்சருகுபல்லவமுதிர்ந்த......................(கசு)

உதிர்ந்தசருகண்ணலுருவத்தினைமறைப்ப
வதிர்ந்திடமிருந்தவளமன்றத்தைநோக்கி
யெதிர்ந்தவர்களுய்தலறியாவிறைவன்மெய்யின்
முதிர்ந்தசருகார்த்தமுசுவுக்கிதுகிளந்தாள்..................(உ0)

மாதுபுரிசாபமுமறந்துலகநாதன்
சோதியுருவிற்சருகுதுன்னவினைசெய்தாய்
நீதிகொடுசாபமிதுநீங்கவருபோது
மோதுமுசுவின்முகமுனக்கமைகவென்றாள்................(உக)

வண்ணவுரைகேட்டுமணிகண்டனருள்செய்வான்
பெண்ணரசியாரையிதுபேசிமுனிகின்ற
யெண்ணரியதீவினையுமீறுசெயும்வில்ல
நண்ணவெமதின்னுருவநல்வினைசெய்தன்றே..............(உஉ)

அன்னதொருநல்வினையடுத்ததிறனோக்கி
யின்னமுசுவுக்கிறைமையீந்துலகமெல்லாந்
தன்னிகரிலாதவொருசக்கரநடாத்த
மன்னியவரம்பலவழங்கவிசைவுற்றும்......................(உங)

வேட்டைபுரிவேடனெமுவேங்கையினையஞ்சி
நாட்டமயராதுநனிவில்லநமதுச்சி
போட்டுயர்கதிக்கணவன்புக்கதறியாய்கொ
லேட்டையுறநீவெகுளலென்றுகையமைத்தான்............(உச)

மங்கையுமைகேட்டுமகிழ்கூர்ந்தருள்வழங்க
வங்கணரும்வம்மெனவழைத்துலகமெல்லாந்
துங்கமுசுகுந்தனெனத்தோன்றியரசாள்கென்
றெங்குவரநல்கியுமையோடவண்மறைந்தான்............(உரு)

## வேறு.

பசுவுயர்த்தியபரமனாரருளியவரத்தால்
விசுவம்யாவையும்வெண்குடைநீழலிற்குளிர்ப்ப
முசுமுக்குந்தன்முறைபுரியரையர்தங்குலத்து
ளசுவமேதநூறாற்றிஞேனஞர்கெடவுதித்தான்............(உசு)

வளர்ந்துபல்வகைக்கலைகளுமறைகளுமற்று
மளந்துமல்கியவைம்பெருஞ்சுற்றமுங்குழுவுந்
தளர்ந்திடாதபல்லுறுப்புமேவரத்தழீஇக்கலியைப்
பிளந்துநீதியின்முசுகுந்தன்பேருலகாண்டான்............(உஎ)

ஆளுநாள்களினகிதவுட்டிரனெனுமவுண
னீளுமாண்மையினெடுவிசும்பமரரையுழக்கித்
தோளினாற்றலால்வலாரியைப்புறங்கண்டுதுறக்க
மூளுமாசிடைமுழுகுறத்தாட்படுத்திருந்தான்............(உஅ)

அகிதவுட்டிரனலரசிழந்தவச்சிரத்தோன்
றுகிலிகைக்குலமாட்டயர்துறக்கநாடொழிந்து
விகிர்தனுக்கொருமாமனும்விலங்கலினொருசார்
நெகிழுளத்தினன்மறைந்துவாழ்நீர்மையனொருநாள்......(உகூ)

முருகுபூம்பொழின்முதிர்ந்தவத்திருவரைச்சாரற்
பெருகுமாதவமிழைத்திடும்பிருகுமாமுனிவன்
றருகுமாரியைக்கண்டனன்றகையணங்குறுத்த
வருகுபோந்துகைப்பற்றியீர்த்தனனறந்துளங்க............(௩0)

வேதமெய்ப்பொருடெள்ளியவிழுத்தவனறிந்து
மாதர்தங்களைவன்மையிற்பற்றுதலரக்கர்
நீதியன்னதுநிகழ்த்தலினரக்கனாகுதியென்
றோதிவிட்டனனும்பர்கோனரக்கனாயுழன்றான்.............(௩க)

அரசிழந்தனனரக்கனாயுழன்றனன்வலாரி
விரசுதீவினைவிளைந்தவாறென்னெனவிம்மிப்
பரசுபொன்னொடுதேவரும்பாரகத்திழிந்து
முரசுகண்படாமுசுகுந்தன்பேரவையடுத்தார்.............(௩உ)

ஆசிகூறினர்முகமனுமியம்பினரவுணர்
பாசிபோன்றுநின்றுடற்றலிற்பாணிவச்சிரத்தோன்
கூசிநீத்ததுமரக்கனாயுழன்றதுங்குழைந்து
பேசிவானகங்காவெனப்பெரிதிரந்தனரால்...............(௩௩)

தேவர்தம்மிடர்தீர்த்திடேனுயினிச்செனனத்
தாவதென்னையென்றமரர்களுடன்விசும்பேகித்
தாவரும்படையகிதவுட்டிரனுயிர்சாடிப்
பூவர்கற்பகப்பொழில்முசுகுந்தன்காத்தனனால்............(௩௪)

வேறு.

இந்திரன்வலியிழந்தின்னல்கோட்படக்
கந்தறநின்றுளங்கலங்குமெங்களை
வந்தனைபுரந்தனைமன்னவிங்கிருந்
தந்தமிலரசுசெய்தருளென்றார்சுரர்............(௩௫)

கடவுளர்மொழிகடவாமைமன்னவ
னடலரியாதனத்தாங்குவைகுபு
புடவியுமேனையபொழிலுங்காத்தன
னிடர்முழுதொழிந்தனவுலகிரேழுமே.........(௩௬)

இன்னணமரசுசெய்திருக்குங்காலத்து
மன்னவனொருதினமாகர்சூழ்தரப்
பொன்னணைமீமிசைப்பொலியவைகினு
னென்னருமவரவர்பணியியற்றினர்............(௩௭)

நாடகமகளிர்கணடிக்கப்புக்கனர்
பாடகத்தளிரடிப்பாவைமார்களு
ளாடகச்சிலம்பணியரம்பைநோக்கினள்
பீடகமன்னவன்வதனப்பெற்றியே.............(௩௮)

பாங்குறுமாதரைப்பார்த்துப்பையவே
யீங்கிவன்முசுகொலோவென்றுநக்கன
ளாங்கதுகுறிப்பினுலறிந்துமன்னவன்
வீங்கியசமழ்ப்புளமேவினனரோ...............(௩௯)

வள்ளலாய்வீரனுய்வாய்மையாளனுய்த்
தெள்ளியநூலனுய்ச்செல்வச்செம்மலா
யொள்ளியபலகுணமுடையனுயினு
மெள்ளியநகையினுலிறைமைநீத்தனன்..........(௪௦)

இழித்தகுமுசுமுகமிகந்துமானுடச்
செழித்தநன்முகனுறச்சிந்தைசெய்தனன்
சுழித்தெழுங்கொழுந்தழறுறுத்திடுங்குண்டத்
துழித்திரள்வச்சிரத்தூணுறுத்தினன்............(௪௧)

நேரியமதலையினிவர்ந்துநின்றுதன்
சீரியகுலம்வளர்தேவனாகிய
சூரியன்றனையுளந்தொழுதுநோற்றனன்
வீரியமுசுகுந்தனென்னும்வேந்தனே............(சஉ)

வழிபடுபரிதிமுன்வந்துசொல்லுமால்
விழிசிவந்துமைமகள்விளைத்தசாபமீ
தொழிவகைபுரிதவமொன்றுமில்லைகா
ணழிவறுசிவபிரானடித்தொண்டல்லதே.......(சங)

கங்கையஞ்சடைமுடிக்கலைவெண்டிங்களார்
தங்கியதலந்தொறுஞ்சார்ந்துபோற்றுறிற்
பங்கமிலாநகம்பணிக்குமென்றனு
மங்குறுதவத்தினையகன்றுமன்னவன்..........(சச)

திரைதவழ்தீர்த்தங்கள்பலவுஞ்சென்றுதோய்ந்
தரையரவசைத்தெரியாடுமண்ணலார்
தரைவளர்தலந்தொறுஞ்சார்ந்துபோற்றினன்
வரைவளர்முசுமுகமாறக்கண்டிலான்..........(சரு)

கவலையுற்றென்னினிக்கைக்கொள்வாமெனச்
சவலையமனத்தனுய்த்தளருமேல்வையி
னவலமுற்றழியலென்றடுத்துநாரதன்
குவலயத்தானுளங்குளிர்ப்பவோதுவான்.......(சசு)

வேறு.

நீரூர்கலிகன்மநாசினியென்றொருநீணதிசேர்
பேரூரெனுந்தலத்தேகுகண்டாய்பிழையாதுவரம்
பாரூர்பலவுந்தொழும்பட்டிநாதர்பணித்தருள்வார்
காரூர்கொடைக்கரத்தாயென்றுகூறிக்கரந்தனனே.........(சஎ)

ஊனூற்றும்வேற்கைநரபதியாங்குவந்தேகிநறுந்
தேனூற்றும்பூநதிக்காஞ்சியினாடிச்செழுங்கருங்கார்
வானூற்றும்போதிவனத்தாதிநாதர்மலரடியிற்
கானூற்றும்போதுகளேய்ப்பணிந்தாடிக்கசிந்தனனே......(சஅ)

வழிநாட்கலிகன்மநாசினிதீரத்துமாமறையோர்
பழிதீரநாடும்விதியாலிலிங்கப்பதிட்டைசெய்து
கழிகாதலின்மிகப்பூசனையாற்றிக்களித்திருந்தான்
சுழிநீர்நதியிற்பின்னாளும்வழிபடத்தோய்ந்தனனே......(சகூ)

இருகால்விளைந்தவெறுழ்வலிச்சாபமிரண்டுவைகல்
வருநீர்படிய்மடிந்துமற்றோர்வைகன்மூழ்குதலா
லொருவுர்முசுமுகன்முகமாகவுவந்தரைய
னருளார்மறையவர்க்கார்த்தினன்செம்பொனுமாடையுமே...()

அணிகலந்தூசுமுதலாம்பொருளமலற்களித்துப்
பணிபலவாற்றிவிழாப்பங்குனிமதியத்தெடுத்து
மணிமருள்கண்டரைத்தென்கயிலாயம்வடகயிலைத்
தணிவறுவைப்பினும்பூசனைசாலவியற்றினனே..........(ருக)

தீர்த்தம்பலவும்படிந்தாடித்தீர்த்தன்றளிபலவும்
பார்த்துவணங்கிமருதோங்கியபனிமால்வரைபோய்க்
கூர்த்தநுதிவடிவேற்கரத்தானைக்குழைந்திறைஞ்சி
யார்த்திவளம்பொருடன்பதிபுக்குலகாண்டனனே.......(ருஉ)

முருகார்கலிகன்மநாசினிமூழ்கிமுசுகுந்தனுக்
கருளாங்கருள்சிவலிங்கங்கண்டேத்தினராக்கையிடை
வெருளார்பிணிமுதலானவைதீர்ந்துவிண்ணோர்வியப்பப்
பொருளார்ந்திரும்புகழீட்டிமண்ணாண்டின்பம்பூணுவரே....()

வேறு.

என்றுகூறியசூதனைமாதவரேத்தினர்
நன்றுகூறினைநாகமிழந்தவலாரிதா
னன்றரக்கவுருக்கொடலைந்தனனென்றனை
பின்றையுற்றதும்பேசெனப்பேசுவன்சூதனே............(ருச)

முசுகுந்தன்முகம்பெறுபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - கக அஅ.

உ

# இந்திரன்சாபந்தீர்ந்தபடலம்.

தாயிலாததனிமகவென்னவுந்தண்ணிய
தோயநீங்குசுருள்விரிபைம்பயிரென்னவு
மேயவாருயிர்நீங்குடலென்னவும்விண்ணெலாந்
தூயவேந்தனிலாமைவனப்புத்துறந்தவே..................(க)

விலாழிமும்மதநான்மருப்பேழுயர்வேழமூர்
வலாரிநீங்கினன்மானவன்மாமுசுகுந்தனுஞ்
சுலாவுநாண்கொடுபோயினனென்னிச்சூழ்வெனக்
குலாலனேமியினெஞ்சுகொண்டும்பர்குழைந்தனர்.........(உ)

ஆயகாலையினாரதனங்கணடுத்தன
னீயிராகுலம்விட்டுதிர்நீண்முடிவேந்தனைப்
போயணுவிப்புணர்ந்தவரக்கவுருத்தனைச்
சாயநீவித்தருவலென்றவ்வயினீங்கினான்....................(ங)

மாலைவெள்ளருவித்திரங்கேமதுமலர்ச்
சோலைசூழ்ந்தபனிவரைச்சாரலைத்துன்னினான்
காலைமாலையும்யாமமுங்கான்முகமேல்கறங்
கோலைபோலுழிதந்தவரக்கனையுற்றனன்....................(ச)

இடர்ப்படுந்தனக்கின்னுணவெய்தியதாமென
வடர்ப்பமேல்வருமிந்திரனாநகத்தங்கைசேர்
கடத்துநீரொருகையிடைவாங்கியெறிந்தனன்
மடத்தைநீற்றுமனுவெனுமைந்தெழுத்தோதியே..........(ரு)

ஐந்தெழுத்துநவின்றறலாநகத்தெற்றலு
முந்துறுத்தமுரண்டிபிந்துறவாங்கினான்
மைந்துகொண்டமயக்கம்வறிதுதணந்தன
னிந்திரன்செயல்கண்டனனீர்ஞ்சடைநாரதன்..............(சு)

வருகவென்றுநடந்தனன்வேதியன்மன்னனும்
பருகுபாற்பசுவைத்தொடர்கன்றிற்படர்ந்தனன்
பொருவின்மேலைச்சிதம்பரத்தெல்லைபுகுந்தனன்
வெருவின்மாதவன்வேந்தனவ்வெல்லைமிதித்திலன்.........(எ)

கண்டுநாரதனெந்தினிப்போக்கெனக்கையினா
லண்டர்கோன்கரம்பற்றினனீர்த்தரிதேகிநீர்
மண்டுகாஞ்சிநதியினமூழ்த்தினன்மன்னவன்
கொண்டசாபவரக்கவுருக்குலைந்தோடிற்றே................(அ)

வேறு.

உறங்கிக்கண்விழித்தாலெனவும்பர்கோன்
மறங்கிடந்தவடிவதுநீங்கலும்
பிறங்குமுன்னெழின்மேனியும்பெற்றியு
மறங்கிளர்ந்தவறிவொடுமெய்தினான்...........(க)

இருந்ததெவ்வுழியெவ்வுழிநின்றனம்
பொருந்துசெய்தியென்னேவெனப்புந்தியின்
மருண்டுவார்சடைமாதவன்றாண்மலர்
தெருண்டசிந்தையினான்சிரந்தீட்டினான்........(கo)

மகதிவீணைவடித்திசைதேக்குகைப்
பகவவீங்குப்படர்ந்ததென்னோதென
நகைமுகத்தொடுநாரதன்றுனவர்
பகைஞகேளெனப்பட்டதுகூறுவான்............(கக)

அகிதவுட்டிரனுலலைப்புண்டுநீ
புகலிடமின்றிப்பொன்னிமையம்புகுந்
திகழின்வைகுழியெய்துபிருகுவின்
மகளைக்காமுற்றுவன்கரம்பற்றினுய்..........(கஉ)

சுரக்குங்கோபத்துத்தொன்முனிசீறலு
மரக்கனுயினையயரதுதெரிந்
திரக்கமாமுசுகுந்தன்விண்ணெய்தினுன்
கரக்கக்காதினன்காழ்த்தவவுணரை............(கங)

வள்ளலங்குவதிவுழிமாதரா
ளெள்ளவிண்ணமிகந்தித்தடநதித்
தெள்ளுநீரிற்படிந்தசிறப்பினு
னள்ளுமாநுடநன்முகங்கொண்டனன்.........(கச)

விசும்புதவ்வெனவேந்தநிற்பற்றியா
னிசும்புமால்வரைகானகம்யாவுநீத்
தசும்புபைம்பொனவிருமிக்காஞ்சியின்
பசும்புனற்படிவித்தனன்காண்டியால்.........(கரு)

அரக்கனுகியசாபமகன்றது
புரக்குநின்னுருப்பூண்டனையென்றலும்
பரக்குமோகைப்பரவைபடிந்தனன்
கரக்குன்றாருங்கடவுளர்வேந்தனே............(கசு)

பொறியிலேனைப்பொருட்படுத்தாய்க்கும்விண்
ணெறியின்வைத்தநிருபற்கும்யான்செயுங்
குறியெதிர்ப்பைகுறித்திடினில்லையா
லறிவவென்றடிமீட்டும்வணங்கினுன்..........(கஎ)

கம்பமீருங்கலிகன்மநாசினி
வம்புலாவுபுனலின்மறுவலும்
பம்புவேதமுறையாற்படிந்தனன்
றம்பிரானடிசார்ந்துவணங்குவான்.............(கஅ)

## வேறு.

மாடகத்திவவுநல்யாழ்மாதவனோடுசென்று
பாடகத்தளிர்மென்பாதப்பைங்கொடிகாணமன்று
ளாடகவிற்றுமுக்கணம்பனாரடியிற்செந்தேன்
றோடகம்பொதிந்தபோதுதூய்ப்பணிந்தாடினானே..............(௧௯)

கள்ளகந்துறுத்தபல்வீகமழ்நறும்பன்னீர்நீழ
லுள்ளகந்தூயவன்பருறுபணியியற்றவைகுந்
துள்ளியமறிமானங்கைத்துணைவனையுமையாளோடு
மள்ளிலைக்குலிசவேற்கையமரனன்பாரத்தாழ்ந்தான்...........(௨0)

தமனியவுலகில்வாழுந்தச்சனைக்கூவிப்பேரு
ரமலனுக்குவகையாரவாலயப்பணியுமற்றுங்
குமரிவல்லிருள்கால்சீக்குங்குருமணித்திரளிற்செய்வித்
திமவரைமருகன்வைகுந்தளியெலாமிறைஞ்சினானே............(௨௧)

நறையிதழ்க்கமலச்சேக்கைநான்முகன்குண்டத்தியாக
முறையுளியாற்றிவிண்ணோர்முகந்துணவவிகணல்கிப்
பிறைவளர்சடையான்மாட்டுப்பெருவரம்பலவும்பெற்று
நிறைவளந்தழையவிண்போய்நெடிதரசியற்றிவாழ்ந்தான்......(௨௨)

இந்திரன்சாபந்தீர்ந்தவீர்ந்துறைகரிகாற்சோழ
மைந்தினன்றுறைக்குமேல்பால்வயங்குமற்றுங்குச்செம்பொன்
சுந்தரவெள்ளிகன்னிதுகில்கலனன்னமற்றுஞ்
சிந்தையின்மகிழ்ந்துதானஞ்செய்பவர்துறக்கமாள்வார்.........(௨௩)

அத்துறைநறுநீராடியாலயம்புகுந்துதாழ்ந்து
வித்தகன்றிருமுனனெய்விளக்கிடுவோர்கள்சுற்றக்
கொத்தொடுமிருளினீங்கிக்குருமணிவிமானத்தேகி
யுத்தமசிவலோகத்தினுலப்பறுகற்பம்வாழ்வார்..................(௨௪)

உரைத்தவத்துறைநீராடியுமைமணவாளர்க்கன்பான்
விரைத்தபூச்சாந்தஞ்செம்பொன்வெள்ளிமற்றுலோகமாடை
திரைத்தவெள்ளிலைக்காயன்னஞ்செய்கரிபுரவிகன்னி
தரைத்தலையிவற்றுளொன்றுசார்த்துவோர்பயன்சொல்வாரார்(௨௫)

எனவகுத்துரைத்தசூதனிணையடிமுனிவர்தாழ்ந்திட்
டனகனேகரிகாற்சோழவுரையனற்றுறையொன்றுங்குப்
புனனதியிடத்துண்டென்னப்புகன்றனையனையசோழன்
றனதுறுசரிதந்தன்னைச்சாற்றெனச்சாற்றுஞ்சூதன்............(௨௬)

இந்திரன்சாபந்தீர்ந்தபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - ௧௨௧௩.

உ

# கரிகாற்சோழன் கொலைப்பழிதீர்ந்த படலம்.



பொன்னிமாநதிபுரக்கும்பூம்பணை, நன்னர்நாட்டினைநன்றுகாத்துவாழ்
மன்னர்தங்குலம்வந்துதோன்றினன், றென்னரஞ்சுவிக்கிரமசிங்கனே......(க)

அனையமன்னவனறத்தின்பேற்றினாற், கனைகடற்புவிகலியினீங்குற
வினைதலில்கலிகாலனென்பவன், றனையனாயவன்சார்பிற்றோன்றினன்......(உ)

மகமியற்றியமதலையெண்ணில, புகரில்கல்வியிற்பொருதுவென்றுவென்
றிகல்செய்வேலினனெளிதினாட்டிய, புகழ்செய்தம்பமும்புகலொணாதவே..(ங)

வேங்கைவார்கொடிமேருமால்வரை, தாங்கவேற்றினான்சகமெலாந்தொழூஉத்
தீங்கில்காஞ்சிமாநகர்செறிந்தகா, னீங்கநற்குடிநிறுவினனரோ..............(ச)

ஆறிலொன்றுகொள்கடமையன்றினர், வீறவென்றுகொள்வெறுக்கையுல்கினா
லேறுவண்பொருளெய்திடும்பொருள், கூறுநான்கினுமறங்கள்கூர்த்துளான்.()

ஆக்கமில்குடிக்காறிலொன்றையுந், தேக்கிவையகஞ்செகிற்பரித்தனன்
காக்குநாளையிற்கானிற்பல்விலங், கூக்கநோக்குபுவேட்டைக்குன்னினான்.....(சு)

வேறு.

தெள்ளியமணிப்புனல்சென்றுதோய்ந்தன
னொள்ளியசெய்கடனாழினாற்றினா
னள்ளொளிப்பொற்கலத்தமுதந்துய்த்தனன்
கொள்ளருவிலைக்கலன்கொண்டணிந்தனன்............(எ)

உடுப்புவன்கவயங்கொண்டுடலம்போர்த்தனன்
றொடுப்புறுகழல்கழற்றுலங்கயாத்தனன்
றடுப்பரும்படைஞரும்வலையுந்தன்புடை
யடுப்பவைங்கதிப்பரிமேல்கொண்டேர்ந்தனன்.........(அ)

கானகமடுத்தனன்கதழ்ந்துவேயினர்
மானமரிடந்துரீஇவந்துசொற்றன
ரூனமில்வலைவளாயொடியெறிந்தனர்
வேனவிற்றேளினான்வியங்கொளாளரே................(கூ)

செருக்களமெனப்பறைதெழிக்கவெங்கணு
முருக்குவன்ஞமலியைமுடுக்கிவிட்டனர்
மருக்கிளர்மலர்ப்புதல்வார்ந்ததண்டினு
லெருக்கினரார்த்தனரெறுழ்ப்புயத்தினர்............(க0)

வேறு.

முழங்கிவன்கொலைவேங்கைபாய்ந்தனமும்மதக்கரிபாய்ந்தன
தழங்கியேனமோடெண்குபாய்ந்தனதாவுமான்கலைபாய்ந்தன
பழங்கணுற்றரியேறுபாய்ந்தனபல்கும்யாளிகள்பாய்ந்தன
வழங்குமத்திரமன்னமுள்ளுடன்மல்குமெய்யினம்பாய்ந்தன...(கக)

வேல்வழங்கினரீட்டிவிட்டனர்வெய்யகப்பணமுந்தினர்
கோல்வழங்கினர்பிண்டிபாலமுங்குந்தமுஞ்சிலரேவினர்
பால்வலைந்தொளிர்காந்தகம்பருவச்சிரத்தடியோச்சினர்
கால்வழக்கமறக்கனன்றுகைப்பாசம்வீசினர்கண்ணிலார்.........(கஉ)

தலைதுமிப்பனவாலறுப்பனதாளிறுப்பனவாருட
ணிலைகுளிப்பனசோரிவீழ்ப்பனநீள்குடர்சரிவிப்பன
வலைவிழித்துணைசூன்றுகுப்பனவைதுமார்புபிளப்பன
கொலைமுகத்தவர்மானின்மீதுகுறித்துறுத்தபடைக்கலம்........(கந)

இரிந்துவீழ்வனகாதுவார்கலையெற்றிவீழ்வனவென்புகண்
முரிந்துவீழ்வனவொன்றையொன்றெதிர்முட்டிவீழ்வனவன்றலை
திரிந்துவீழ்வனகூவிவீழ்வனசீறிவீழ்வனமீளியர்
சொரிந்தவாய்தமனைத்தும்வெய்துதொடர்ந்துசாடியமான்களே...()

மடைவயிர்க்குலமெங்குமேங்கினமாடுபம்பையிசைத்தன
தடைபடுத்துளர்நாய்குரைத்தனசார்ந்துமள்ளர்தெழித்தனர்
மிடைவலைத்திரள்சூழ்ந்தசூழல்விறந்துமான்பலவீந்தன
வடையலர்க்குருமேறனன்பலவாளியாளியடர்த்தனன்.......(கரு)

இளமைமான்களலைத்திலார்பிணியெய்துமான்கடொடர்ந்திலார்
வளமைமிக்கதொர்சூலுடைப்பெண்வருத்திலார்வளர்மூப்பினற்
றளர்விலங்குகள்சாடிலாரிவைதப்பமற்றையமானெலாம்
வெளிறில்கேள்வியர்கைப்படைக்கலம்வேறுவேறடமாண்டவே...()

வேறு.

வேட்டைத்தலைநீங்கினன்மீளியர்பாங்குபோதக்
காட்டிற்கரிகால்வளவன்கடிதேகுவானேர்
தோட்டுக்கமலங்கள்விரிந்துசுகந்தம்வீசுஞ்
சேட்டுக்கதிர்மாமணியோடைகண்டாங்குச்சென்றான்....(கஎ)

புடைமாண்டவளம்பலநோக்குபூத்தபல்வீ
யிடைமாண்டநிழற்கயநோக்கியங்கெய்துமுன்னர்
நடைமாண்டொருகேழலடுத்துநன்னீர்குடிப்பத்
தொடைமாண்டவில்லிற்கணையொன்றுதொடுத்துவிட்டான்...()

பட்டுருவிக்கணைபன்றிபதைத்துவீழக்
கெட்டேனொருபூதமெழுந்துகிளக்கலுற்ற
தொட்டார்க்குருமேறனையாயொருபன்றியாமென்
றட்டாயெனையந்தணனுன்வரலாறுகேட்டி...............(கசு)

தொல்லைத்தவத்தர்வினைநல்லனசூழ்ந்தவென்னைச்
சொல்லிப்புவியோர்கள்சுவிர்த்தியெனத்துதிப்பார்
வல்லைத்தெறுபூண்முலைமாதுடன்வாழுநாளி
லில்லத்தறநீத்துவனத்தறமெய்தினேனால்...............(உ0)

மனைமாதொடுசுற்றமுமென்னைவனத்தினூடும்
வினைபோற்றொடர்வுற்றனர்வெய்துவெகுண்டுநீவார்
தனைநாடியொர்பன்றியுருக்கொடுதம்மைவஞ்சித்
தெனையாவருங்காண்டலுறாதிங்கிருந்துளேனால்..........(உக)

அரிதாகியவிவ்வுடனீங்குதற்கோவறியேன்
பெரிதாகியதாகமுடற்றப்பெயர்ந்துபோந்தேன்
கரிகால்வளவாவெனையட்டனைகாவல்பூண்ட
வுரிதாகியநாடுமுனக்கிலதாகுமன்றே.....................(உஉ)

இப்பூதவுருக்கொடுநீயெவணுற்றியேனு
மப்பாலுனைத்தொடர்வேனகலேன்மன்யானென்
றுப்பூதமடுத்தெதிர்தட்குமுளர்ந்துகொட்குந்
தப்பாதுகையெற்றுமதிர்ந்துதணக்குமீளும்...............(உங)

நன்றுஞ்செயலுன்னுமனத்தைநடுக்குநல்ல
குன்றுவினைசெய்திடின்வெய்துகுலைக்குநன்மை
பொன்றுத்துதிசெய்திடினுப்பெயராமைபூட்டு
மொன்றுதகொலைப்பழிநோக்கியுலைந்துமன்னன்..........(உச)

மறையோர்தமைக்கூவியிவ்வல்வினைத்தீர்வுசொன்மி
னறைபோயதெனுள்ளமெனத்தொழவந்தணாளர்
பிறைநீரொடுவேணிமுடித்தபெம்மான்றலங்க
ணிறைகாதலிற்சென்றுவணங்குதிநீங்குமென்றார்........(உரு)

அரையன்மகிழ்வுற்றானூர்நடமாடுதில்லை
விரைபொங்கியசோலைவிராவுகுடந்தையாரூர்
வரையென்றயிர்மாடநிலாவுவண்காஞ்சிகாசி
புரையின்றுயர்சேதுமுதற்பலபோற்றச்சென்றான்........(உசு)

வேறு.

அன்னசெவ்வியறிந்தொருதானவனுண்மையான்
கன்னசூலனெனக்கரையப்படுநாமத்தான்
வன்னியோம்பிமனுக்கணித்தந்தணர்மல்கிய
பொன்னிநாடுதன்ருட்படுத்தாணைபுதுக்கினன்.............(உஎ)

இனையசெய்கைநிகழ்ந்துழியீர்ம்பனிமால்வரைத்
தனையையம்மலைச்சாரலிற்றன்னுயிர்நாயகன்
புனைபுகழ்க்கழற்பூசனையாற்றுநளேவல்செய்
நனைமலர்க்குழலாரொருநால்வருமூவரும்.................(உஅ)

மாதரன்னவரோர்தினம்வைகறைவார்மதுப்
போதுகொய்யப்புகுந்தனர்நந்தவனத்திடை
யோதருங்கவினுற்றவன்காந்தருவன்புகக்
காதல்கொண்டுகலங்கினர்மாதரெழுவரும்.................(உகூ)

நெடிதுபோதுகலங்கியநெஞ்சநிறுத்தினர்
கடிவிராவியபன்மலர்கொய்துகடுகினர்
வடிகொள்சூலத்தர்பூசைசெய்காலம்வழுக்கலிற்
றொடியினர்செயல்யாதெனப்பார்ப்பதிசூழ்ந்தனள்.........(௩0)

நெகிழ்ந்தவுள்ளத்தராகிமுன்னேர்ந்தவொருத்தனை
மகிழ்ந்துகாமுற்றுமாழ்கினரென்றுமதித்தனண்
முகிழ்ந்தபூண்முலையீர்முதல்வன்பணிதாழ்த்தினிர்
நெகிழ்ந்தகாமத்துச்சிந்தனைசெய்தனிராதலான்............(௩க)

தோற்றிமானுடமாதர்களாய்த்தொகுகற்புறூ
லாற்றினீங்கியநங்கன்பதாகையன்னீர்நுமக்
கேற்றவாறுநடக்குகவென்றுசபித்தனள்
கோற்றொடிக்கைக்குவிமுலைக்கூர்விழிப்பார்ப்பதி.........(௩உ)

அஞ்சிலோதியம்மேகினதேவன்மிக்காற்றினேம்
வஞ்சமானுடராகிமயங்குதுமோவெனக்
கஞ்சநேர்பதங்கையிணைகூப்பியிறைஞ்சினர்
நெஞ்சுதுட்கெனவஞ்சுபுநேரிழைமாதரார்................(௩௩)

## வேறு.

ஆர்ங்கடித்துணர்ணிந்தவரிடப்பாலமர்ந்தநாயகிதிருவருள்வழங்கிப்
பீர்ங்கொடிப்புதுமலர்நிகர்நிறத்தீர்பேதுற்றஞ்சலிர்சீரங்கவரைப்பிற் [ற்
சார்ங்கபாணியைவழிபடுமறையோன்சார்ங்கன்முனியெனும்பெயருடையா
கீர்ங்களோதியள்சந்திரவதியென்றியம்புமாதராளில்லறம்பூண்டாள்......(௩௪)

நீயிர்போயவண்மக்களாயுதித்துநிறைந்தபோகங்களுகர்ந்திடுநாளிற்
காயிலைக்கதிர்வேலுடைக்கரிகாற்காவலன்கொலைப்பழிதனைக்கழுவ
மாயிரும்புவிமுழுவதுமுய்யவயங்குவெள்ளியம்பலத்துணின்றுடுந்
தீயினன்னசெம்மேனியர்பேரூர்செல்லுவானுமதிரும்பதிவருமால்........(௩௫)

வந்தகோமகனுடனவனேகிவார்ந்தபூம்புனற்காஞ்சிமாநதியி
னந்தமாதியுமில்லவர்பாதமகத்துணுடிநன்காடிமானுடமாம்
பந்தநீங்கியீண்டுறுகவென்றருளப்பசும்பொற்பூண்முலைமாதரவ்வாறே
கந்தமார்பொழிற்சீரங்கவரைப்பிற்கலந்துமன்னவன்வரவுபார்த்திருந்தார்...()

## வேறு.

அந்தணர்விதியாற்முனலைதவழ்பலதீர்த்த
மந்திரநவின்றுடிவளம்பயிறலந்தோறுஞ்
சுந்தரவெண்ணீறுதுலங்கியதிருமேனி
யெந்தையைவழிபட்டானிலங்கயிற்கரிகாலன்.............(௩௭)

குலவியதலந்தோறுங்குறுகினன்வழிபட்டு
மலமருதுயர்செய்யுமரும்பழிகழியாமே
கலதிசெய்திடவுள்ளங்கவலையங்கடலாழ்ந்து
நலனுறுபுணர்நாளுநணுகுங்கொலெனநைந்தான்........(௩அ)

நலிகெழுதுயர்தேர்ந்துநாரதமுனிசென்றுன்
வலிகெழுதிரடிண்டோண்மன்னவன்கரிகால
னொலிகெழுதுதிசெப்பியொண்சரண்முடிதாழ்த்தான்
கலிகெழுமறைநாவன்கரிசறமொழிகிற்பான்...............(௩௯)

மன்னவர்திறைவாங்குமானவகரிகால
நின்னுளம்வெருவற்கநீடியதுயர்நீவி
நன்னெறிதருசூழ்ச்சிநவிலுதுமினிக்கேண்மோ
வென்னுளமகலாதவிருந்தலமொன்றுண்டால்.............(௪0)

பிப்பிலவனமென்றும்பேசுமப்பேரூரி
னுப்பறுநதிக்காஞ்சியொழுகுவதந்நீரின்
முப்புரிமணிமார்பர்மொழிமறையுளியாடி
யப்பணிசடையார்தம்மடிதொழுகெனப்போனுன்.......(௪௧)

முனிவரனருள்செய்தமொழியுறுதியிற்பற்றி
வனிதையர்மயல்கூரும்வனப்புடைக்கரிகாலன்
புனிதமங்கலமல்கப்பூம்பணைப்பேரூரிற்
கனிமொழியுமைபாகன்கழறெழவழிக்கொண்டான்......(சுஉ)

சந்தனக்குறடுந்தித்தபனியப்பொடிசிந்திக்
கொந்தலர்மலர்வாரிக்குளிர்நிறைகாவேரி
வந்திருபுடையுந்தண்வார்கழறெழுநீலக்
கந்தரத்தினராணைக்காவினைத்தொழப்புக்கான்............(சுங)

மன்னவன்கரிகாலன்வரவினையினிதோரா
வின்னகைத்துவர்ச்செவ்வாயிடுகிடையெழுமாதர்
முன்னினர்தஞ்செய்கைமொழிந்தனரிதுவோநம்
மன்னையதருளென்றுவகமகிழ்வினனானான்...............(சுச)

மாதவனமக்குய்த்தவண்மொழிக்கிழுக்கில்லை
மாதவன்வலமேயவரதர்தம்மிடநீங்கா
மாதவளருள்செய்தவகையிதுவெனவெழுவர்
மாதர்சொற்றலினென்றுமகிழ்வுறுகரிகாலன்.............(சுரு)

சிவிகைகளேழுவர்க்குஞ்சேர்த்தினன்கொடுபோந்து
கவியொடுமுசுவுகளக்கனியுகுபூஞ்சோலைக்
கவிழிணர்மலர்வாசங்காவதம்பலகமழு
மவிர்மணிநெடுமாடத்தாதியம்புரிசேர்ந்தான்............(சுசு)

கழுமல்செய்கொலைச்சாயைகழிகெனச்சங்கற்பஞ்
செழுமறைமுறையாற்றூற்செய்துயர்கரிகால
னெழுகுதண்புனற்காஞ்சியுந்தியிற்படிவுற்றான்
முழுகினர்வருசாபமுடிகெனவெழுவோரும்..............(சுஎ)

ஆர்த்தினர்மணிசெம்பொன்றுடைகள்கதிர்ப்பைம்பூண்
சேர்த்தனர்குருச்செங்கட்சுரபிகன்னியர்மற்றும்
பார்த்தலையிரப்போர்க்கும்பரமர்தமடியார்க்கு
மோர்த்துணர்மறையோர்க்குமுரைத்தவெண்மருமாதோ(சுஅ)

கோயிலையெண்மர்களுங்குறுகினர்பலநல்கிப்
பாயினகலையல்குற்பசுமரகதவல்லி
மேயினள்பிரியாதவிகிர்தனையடியார்க்குத்
தாயினுமினியானைச்சயசயவெனத்தாழ்ந்தார்.............(சுகூ)

அகன்றதுகொலைச்சாயையரையனுக்கெழுமாதர்க்
ககன்றதுவருசாபமரமகளிர்களானு
ரகன்றனழ்மகிழ்பொங்கவாடினர்பலபாடி
யகன்றரையரசானுமண்ணலுமடவாரும்.................(ருo)

அத்தினமுணவோம்பியடுதுயிலிரவெள்ளித்
தத்தலைநெடுவேலைத்தழற்கதிரெழுகாலைப்
பைத்தெழுநதியாடிப்பவமறுவாராமே
நித்தியனருள்பெறுமாகினைந்தனரிதுசெய்தார்...........(ருக)

மண்டபநிருமித்துமண்டிலமெழிற்குண்டங்
கண்டழல்வளர்வித்துக்காவலன்மடவாருங்
கொண்டிருசிவலிங்கங்குரைபுனநதிப்பாங்க
ரெண்டிசைகளுமுய்யவிருத்தினர்பூசித்தார்..............(ருஉ)

மருக்கிளர்மலர்சாந்தமஞ்சனமொளிதூபந்
திருக்கிளர்கலனுடைதிருவமுதிவைமற்று
மொருக்கியமனத்தானுய்த்துறுமுறைபூசிப்ப
வெருக்கணிபெருமானுரெதிரவர்க்கெளிவந்தார்.........(ருந)

மான்மழுக்கரம்வைகவார்சடைமிளிர்கிற்பக்
கான்மருவியகூந்தற்காரிகையிடமாக
வான்முதிகிடைத்தோற்றுமமலனையெதிர்நோக்கி
வேன்மருள்விழிமாதர்வேந்தனொடுவீழ்ந்தார்..........(ருச)

வேண்டியவரமென்னேவிளம்புதிரெனமுன்வந்
தாண்டருள்பெருமானுரருளலுமவர்விள்வார்
மாண்டவல்வினைத்துன்பம்வருவதுபிறவியினு
மீண்டினிப்பிறவாதநெறியெமக்கருளென்றார்............(ருரு)

அந்தியின்மதிவேய்ந்தவழகரங்கருள்செய்வா
ரிந்தவைப்பிடையெம்மையேத்துநர்பிறவார்க
ளுந்தரத்தினுமந்தநோன்மைகொள்வரஞ்சாலத்
தந்தனமிதற்கானசான்றுமிங்குளவன்றே................(ருசு)

வித்ததுமுளையாதமேத்குபுளியொன்றுன்
றத்தகுசித்தேசமரமவைமுறையானே
யுத்தரகயிலையினுமோங்குநம்மாலயத்து
முத்தமநெறிநின்றீரோங்கினவறிகென்றார்...............(ருஎ)

அருளியவரம்பெற்றங்கருட்பணிபலவாற்றி
முருகுயிர்மலர்க்கொன்றைமுடியவர்விடைபெற்று
ரொருவியவுமைதன்பாலுற்றெழுமாதர்களுந்
திருவியலவளேவல்செய்தனர்வாழ்கின்றார்...............(ருஅ)

பரிசனம்பலசூழப்படைபலபுடைசூழ
வுரியசனுடெய்தியொன்னலன்முடிவீட்டிக்
கரிசறுசெங்கோலிற்கடலுலகளித்திட்டான்
வரிகழற்கழன்மன்னர்மன்னவன்கரிகாலன்..............(ருக)

வேறு.

அறமாதரிக்குங்கரிகாலவரையன்றனக்குமாதருக்கும்
பிறவாநெறிதந்தருளுதலாற்பெருநீர்க்காஞ்சிநதிதனக்கு
முறவாயுயிர்கட்கருள்சுரக்குமுமையாள்கொழுநன்பேரூர்க்கு
மறவாதுரைக்குமுவலகும்வழங்கும்பிறவாநெறிநாமம்.....................(சுo)

கள்ளுமறுகாற்புள்ளினமுங்களுலுமலருநவமணியுந்
தெள்ளுநிறைநீர்நதிக்காஞ்சித்தீர்த்தத்திடையேகரிகால
வள்ளல்படிந்ததுறைதனக்குவழங்குநாமமனத்தகத்துத்
தொள்ளையகன்றவையகத்தோர்சோழன்றுறையென்றுரைப்பரால்.....(சுக)

பிறவாநெறியிற்படிந்திருக்கும்பேரன்புடையார்க்கேயன்றிப்
பிறவாநெறியென்றுரைத்தவர்க்கும்பிறவாநெறிதந்தருளுமெனப்
பிறவாநெறியின்றிறந்தெரித்துப்பிறங்குசூதன்முனிவரர்க்குப்
பிறவாநெறியார்பள்ளனுமாம்பெற்றிதெரியவகுத்துரைப்பான்............(சுஉ)

கரிகாற்சோழன் கொலைப்பழிதீர்ந்தபடல முற்றியது.

ஆகத்திருவிருத்தம் - கஉளசு.

---

வ்

# பள்ளுப்படலம்.

---

கயிலைநாயகன்காமருதன்னுருப்
பயிலுமாடியிற்பார்த்தங்கழைத்தலும்
வெயில்செய்வெங்கதிர்கோடிவிராயெனச்
செயிரிலாதமெய்த்தேசொடுதோன்றினன்..........(க)

அன்னசுந்தரற்காலாலமாழியின்
முன்னமுன்னவனுண்ணமற்றன்னதைத்
தன்னகங்கைத்தழீஇச்கொடுநல்கலாற்
றுன்னுமாலாலசுந்தரநாமமே.............................(உ)

ஏழைபாகற்கினியநற்றொண்டுகள்
சூழுமாலாலசுந்தரனோர்தினந்
தாழிணர்க்கடித்தண்மலர்கொய்திட
வாழிநந்தவனத்திடைநண்ணினன் ....................(௩)

வாமபாகத்துநாயகிவார்குழற்
காமலர்த்திரள்கொய்யவனிந்திதை
காமர்மல்குங்கமலினிமற்றிவர்
தாமுமவ்வுழிச்சார்ந்தனரென்பவே ....................(௪)

இருவர்மாதர்வனப்புமெழினடை
யொருவர்நோக்கவொருவர்வனப்பெலா
மிருவர்மாதருநோக்கினர்மற்றிவர்ந்
கொருவிலேங்கணைமாரனுறுத்தினன் ....................(௫)

நகுமுகத்தொடுநம்பியகன்றனன்
புகுமுகம்புரிபூவையர்தாங்களு
நெகுமனத்தொடுநீங்கினர்தம்பிரான்
றகுதிநோக்கிப்பவத்திடைச்சார்த்தினன் ............(௬)

வேறு.

நாவலூர்ச்சடையனாராநார்ன்மறைக்கிழவர்மாட்டுத்
தேவருமிறைஞ்சுநம்பிதிருவவதாரஞ்செய்திட்
டேவரும்புகழாரூரரெனும்பெயர்பற்றினாராற்
பூவரில்கொண்டகூந்தற்பூவையரிருவர்தம்முள் ....................(௭)

கமலினியென்னுமாதுகாமர்சோணாட்டிற்பைந்தே
னுமிழ்மலர்ச்சோலையாரூருருத்திரகணிகையார்பா
லமரரும்வியக்குங்கற்பினாரணங்கென்னத்தோன்றித்
தமர்பிறர்பரவையென்றுசாற்றிடும்பெயர்பெற்றாளால் ...........(௮)

அனிந்திதையென்னுந்தையலமர்பெருந்தொண்டைநாட்டி
னனந்தலைப்பழனஞ்சூழ்ந்தஞாயிறென்றுரைக்கும்வைப்பி
னினந்தழைதரும்வேளாளர்குலத்திடையினிதுதோன்றிச்
சனந்தழையுலகுபோற்றுஞ்சங்கிலிநாமம்பெற்றாள் ..............(௯)

வளர்ந்திடுநாளாரூரர்மறைபலதிருந்தவோதி
யளந்துபல்கலைகண்மன்றலாற்றுநற்பருவஞ்சார
வுளந்தழைத்தீன்றதாதையொருமகட்பேசியோகை
கிளர்ந்தெழுசுற்றமெல்லாங்கெழீஇப்புரிவதுவைநாப்பண் ......(௧௦)

கண்ணுதற்கரந்துபெம்மான்காவணத்திடையேபுக்கு
மண்ணவர்மருளச்சாலவழக்கிட்டுத்தடுத்தாட்கொள்ள
வெண்ணெய்நல்லூரின்மேயவிகிர்தனைத்தொடர்ந்துமுன்னர்ப்
புண்ணியப்பொருளாயுள்ளார்பித்தனென்றெடுத்துப்போற்றி..(கக)

நாவலூர்புகுந்துபாடிநற்றவநெறிதாவென்று
தேவர்கடேவிற்போற்றித்திருத்துறையூரிற்பெற்றுத்
தீவணமேனியார்தாந்திருவதிகையின்பாற்கங்குற்
சேவடிசென்னிசூட்டத்திருவருள்போற்றிப்போந்து..........(கஉ)

வேறு.

திருமாணிகுழிவழுத்தித்தினைநகரைப்பரசிப்போய்க்
கருமாளத்திருத்தில்லைக்கனகசபையிடைநவிற்றும்
பெருமான்மெய்த்திருநடனம்பேரார்வத்தொடும்பழிச்சி
மருவாரும்பொழிற்புகலிமாநகரந்தொழப்புக்கார்...............(கங)

அங்கணர்தாங்கயிலைவரைவீற்றிருக்குமருட்காட்சி
யங்கெதிரேகொடுத்தருளவதுகண்டுபோற்றிசைத்துச்
செங்கண்வராலுகள்பொய்கைத்திருக்கோலக்காவிறைஞ்சித்
தெங்குமலிநறும்பழனத்திருப்புன்கூர்பாடினார்..................(கச)

மயிலாடுதுறையும்பொன்மாகாளம்புகலூரும்
பயில்வாய்மையொடும்பாடிப்பணிந்துதிருவாரூர்புக்
கெயில்வேவநகைத்தாரையின்றமிழ்ச்செந்தொடைபாடித்
துயிலாமுக்கண்ணர்தாந்தோழராமருள்பெற்றார்................(கரு)

புற்றிடங்கொண்டவரருளாற்பூங்கோதைப்பரவையுார்.
முற்றிழைமென்முலைமன்றன்முறைமையாற்கலந்தருளிப்
பற்றுமணக்கோலத்திற்பயிலுநாள்விறன்மிண்டர்
செற்றமிகத்திருத்தொண்டத்தொகையருளிவழிபட்டார்......(கசு)

குண்டையூர்க்கிழவர்மனைக்குறைவறுக்கநெற்றந்த
வண்டநாயகரந்தநென்மலையையாரூரின்
வண்டுவாழ்குழற்பரவைமனையட்டித்தரவருளான்
மிண்டுபூதரைவிடுப்பக்கோளிலியிற்பாடினார்.....................(கஎ)

கோட்புலியார்நாட்டியத்தான்குடியதனில்வழிபட்டு
வேட்டருள்வீரெனப்பயந்தமென்கொடியாரைக்கொடுப்பச்
சேட்டெழிலார்தமைமகண்மைகொண்டருளித்திருப்பாட்டி
னாட்டிவலிவலத்துப்போய்நாதர்தமைப்பாடினார்...............(கஅ)

## வேறு.

இறைவர்புகலூரிட்டிகைகளீழமாக்கித்தரப்பாடி
நிறையுமகிழ்வாற்றிருப்பனையூர்நிமலர்நிருத்தந்தரப்போற்றி
நறைமென்கமலத்தடஞ்சூழ்நன்னிலமும்வீழிமிழலையு
மறவர்திருவாஞ்சியமரிசிற்கரைப்புத்தூரும்பாடினர்......(கக)

## வேறு.

ஆவடுதுறைசையிடைமருதான்றதிருநாகேச்சுரஞ்சிவபுரஞ்சீர்
மேவியகுடமூக்கிறைவலஞ்சுழிநல்லூர்சோற்றுத்துறைவிரிமலர்ப்பைங்
காவளர்கண்டியூருமையாறுங்கவின்றபூந்துருத்தியும்வினையின்
றுவறுதிருவாலம்பொழிலென்னுந்தலமழபாடியுந்துதித்தார்..............(உ0)

சீர்வளரானைக்காவினைப்பரசித்திருப்பாச்சிலாச்சிராமத்துக்
கார்வளர்கண்டர்பொன்றரப்பாடிக்கைக்கொண்டுதிருப்பைஞ்ஞீலியின்வன்
கூர்வளர்சூலப்படையரைப்புகழ்ந்துகுலவுபல்பதிகளும்வணங்கி
யேர்வளர்கொங்கிற்கொடுமுடிவழுத்தியெய்தினார்காஞ்சிவாய்ப்பேரூர்...(உக)

ஆரணமுழக்கமருதபேரூரினமர்ந்துவாழடியவரெல்லாந்
தாரணிகூந்தல்பாகனார்தோழர்சார்ந்தனரெனப்பெருங்களிப்பாற்
றோரணம்வாழைகாவணமுறுத்திச்சுடர்நிறைகும்பங்கணிறுவிச்
சீரணிவீதியலங்கரித்தெதிரேசென்றடிதொழவெதிர்தொழுதார்............(உஉ)

வந்தமெய்யடியாருடனள்ளாவிமகிழ்கொடுபோதுவாரகிலுஞ்
சந்தனக்குறடும்பீலியுமணியுந்தபனியப்பொடிகளுந்திரையி
னுந்திவந்தொழுகுங்காஞ்சிமாநதியினுற்றுநீர்படிந்தனரேகிச்
சுந்தரமிகுந்தகோயின்முன்வணங்கித்தொழுதகம்புகுந்தனர்தொண்டர்..(உங)

உயர்ந்தவுந்தாமேயிழிந்தவுந்தாமேயெனமறையோலமிட்டுரைக்கும்
வியந்ததஞ்செய்கையிரண்டனுளொன்றுவேதியனுகிமுன்காட்டிப்
பயந்தருமிறைவர்மற்றதுங்காட்டப்பள்ளனாய்த்திருவிளையாட்டா
னயந்தபூம்பணையின்வினைசெயவன்பர்நண்ணுமுனண்ணினரம்மா.........(உச)

புலியதள்கழுவாக்காழகவுடையாய்ப்பொலியநால்வாய்க்கரியுரிவை
யொலிமயிர்நூற்றபடாமெனவயங்கவொளிர்சடைதலைச்சுற்றாய்மிளிர
வலியரித்துவக்குப்பக்கறையாகவாளராவதன்கயிறாகக்
கலிகெழுமறையாகமங்கழலாகக்கண்ணுதல்பள்ளனாதலுமே..............(உரு)

பட்டிநாயகர்தம்மிடம்பிரியாதபச்சைநாயகிபள்ளியாகி
முட்டிலாதழலிளந்தணருக்குமூரியானூன்களேயூற
வட்டும்வாரிமுதேயரியலாவங்கணளித்திடுமுணவெலாமுணவா
விட்டுநாயகர்கைத்தலைக்கலத்தூட்டியெழில்வயல்வினைசெய்வானின்றாள்.....()

கடலிடைத்துளபக்கமடமுன்பிடித்தகயமுகக்கடவுளுமீனின்
றடமுலேச்சுவைப்பால்பருகியமணிவேற்சாமியும்பள்ளாற்சிறுரா
யிடனகல்வயலிற்கமடமுமீனுமெடுத்தெடுத்திரும்பணைப்புறத்துத்
திடரிடத்துறுத்திக்குறுகுறுநடந்துசிறுவிளையாட்டயர்ந்தனரால்.........(உஎ)

இந்திரன்பிரமனாரணன்முதலாமிமையவர்நுகமலமேழி
வெந்திறற்கொழுவார்கயிறுகோல்பகடுவித்துநாறனைத்துமாயங்கு
வந்தனர்பயிலவன்கணநாதரேவல்செய்மள்ளராய்விரவி
முந்துறும்பட்டிப்பள்ளனையடுத்துமொழிவழிவினைதொடங்கினரால்....(உஅ)

உழுநரொருபாலுழுதசேறழுந்தவொண்புனல்பாய்த்துநரொருபான்
முழுவரப்பருகுசீக்குநரொருபான்மொய்மரம்படுக்குநரொருபாற்
செழுமணிப்பகடுபூட்டுவிட்டோப்பிச்செறிபுனன்மண்ணுநரொருபால்
விழுமியநாறுவார்க்குநரொருபால்வித்துநரொருபுறமானார்...............(உகூ)

திருமகள்வாணிசசிமுதலானதேவியர்பள்ளியராகி
யிருகையிலணிந்தகுருகினந்தெழிப்பவிட்டிடைவருந்தவார்செவியின்
மருவியதோடுநாலவார்கூந்தன்மல்கியதோளின்வீழ்ந்தலேய
வுருகெழுபச்சைப்பள்ளியோடயர்ந்திட்டொண்முடிநாறுநட்டனரால்....(௩0)

இன்னணமிவர்கள்வயல்வினையியற்றியிருந்தனராகவாலயத்து
முன்னியநாவலூர்வருமன்பர்முதல்வனார்தமையெதிர்காணார்
மன்னிமிலேற்றைவினவினரேறுவன்றெண்டர்க்குரையலென்றிறைவர்
சொன்னமைகுறித்துவிழியினாலுணர்த்தத்தொடர்ந்தனர்வயலிடந்துருவி....()

வேதநாடரியவிழுப்பெரும்பொருளாய்விளங்கியபட்டிநாயகருஞ்
சீதவாண்முகத்துமரகதமயிலுந்தேவர்பூதர்கள்புடைநெருங்கப்
பாததாமரைகள்சேதகத்தலரப்பயிறிருவிழாவினைத்தொண்டர்
காதன்மீக்கூரச்சேயிடைநோக்கிக்களிப்பொடுமெதிர்பணிந்தெழுந்தார்...(௩உ)

மாசுதீர்தவத்துமாதவன்முதலோர்மண்ணிகெடுமோலிகடீண்டக்
கூசுதாட்கமலமுறவியுங்கயலுங்கூர்மமுங்கீடமுமுதலாப்
பேசுமாருயிர்கடீண்டுதற்கானபெருந்தவந்திருந்தியபேரூர்க்
காசுதீர்வரைப்பிற்களித்துவாழ்ந்ததுவேயாமெனக்கருத்துட்கொண்டடுத்தார்

அராவணிசடிலப்பள்ளனார்தோழரடுக்கவந்தமையறியார்போற்
பராமுகத்தினராய்ப்பள்ளிகள்பள்ளர்தம்மொடும்பயின்றிருந்தொழிலி
னுராவுநீர்ப்பணையினுழிதரனோக்கியுறப்பணிந்தெழுந்துதோழமையால்
விராவியவன்பர்மகிழ்ச்சிமீக்கிளேப்பவியப்பொடுமெசதியாடுவரால்.........(௩௪)

மறையவனரசன்செட்டிதன்றாதைவயங்குநூற்சூத்திரன்புவனம்
பறைதருநல்லசங்கரன்வேடன்பணிசிவன்விளங்குமுக்கணக்க
னறைசெயம்பட்டனகமதுபுறத்தேகாலியாட்டரவமாரிடையன் ,
பறையனுமுன்னரானநீயின்றுபள்ளனானமைதெரிந்தேன்யான் .........(௫௫)

இறையவன்வள்ளலெனப்புகன்றெடுத்தவெனக்குநீபள்ளனாய்ப்பயந்தாய் ,
மறையவனாகப்பள்ளனாஞ்செய்கைவனப்பிதுநிற்கநின்றனகது
நிறையுணவாலங்கயமுகப்பிள்ளைநினைத்தவர்குறைமுடித்துண்ணுங்
கறைகெழுவேற்கைப்பிள்ளையோர்செட்டிகழனிநெல்விளைப்பதிங்கார்க்கே(௫௬)

மரகதவல்லியன்னபூரணியைவரவுயிர்த்தமராதியர்க்கு
விரவியபசிமுன்கெடுத்தலினவட்குவிளைத்துநீசோறிடல்வேண்டா
பரவிவந்தெனைப்போலடுத்தவர்க்குவந்துபரிசிலாப்பைம்பொனாதிகளைத்
தரவிதின்முயன்றுவருந்துதல்வேண்டாதனதனிற்சார்ந்தநற்றோழன்....(௫௭)

அல்லதூஉமொருவர்சார்பினாற்பிழைத்தலடாதெனத்திருவுளத்துளதேல்
வல்லவாறதற்கேபிறந்தவேளாளர்வழிவழியடிமையாயுள்ளார்
நெல்லெலாம்விளைத்துத்தருகுவரதனானிரம்புறுதெனிற்குண்டையூரி
னல்லவேளாளனொருவனுக்களித்தநற்றிறமுள்ளதேபோதும்............(௫௮)

வேறு.

அராப்பள்ளியாற்கருளுநேமிப்பள்ளியறப்பள்ளியகத்தியான்பள்ளியான்ற, சிராப்பள்ளிநனிபள்ளிசெம்பொன்பள்ளிதிருக்காட்டுப்பள்ளிகரவீரங்காட்டு,ஒராப்பள்ளிமகேந்திரப்பள்ளிநன்மையுற்றசிறப்பள்ளியிடைப்பள்ளியெல்லா, மராப்பள்ளியில்லாமலாண்டுகண்டோ வயறுபேரூர்ப்பள்ளிகளையாளாநின்றீர்..................................................(௫௯)

விண்ணின்மழைமறுத்திடினுங்கங்கையுண்டுவிடையுண்டுபெட்டிபிடவிடப்பாற்கண்ணே, வண்ணநெடும்பயிர்வளர்ப்பதுலகைநட்டுமலக்களைதீரிடப்பள்ளிவல்லிவல்லள், பண்ணைநட்டுக்களைபறிப்பமிருகங்காப்பப்பசுந்துழாய்ப்பன்றியொருகோடுவாங்குந், திண்ணியசேயுளனரசும்வேறன்றென்றேதிருவுளஞ்செய்தீருழ்வுசெய்தற்கென்றார் ..........................................(௬௰)

வேளாளனெனநம்மையடுத்ததோழன்வியனெடும்பண்ணையிற்பள்ளனாகிநின்று,தாளாண்மையியற்றிடினும்விட்டுப்போகான்றனக்குவப்பச்செய்துமெனாதம்பிரானார், கேளாகிவினைபுரிந்தாருடங்குபோதக்கிளர்மணிநீள்வரப்பேறிச்சென்றுசெம்பொன, றோளாதமணிகொழிக்குங்காஞ்சியாடிச்சுடர்மணிக்கோயிலிற்புகுந்தார்தோழரோடும்..... ......................................(௬௧)

வேறு.

பண்ணையிலேரிற்பூட்டிப்பகட்டொடுமுழாதுவைத்தா
னண்ணியதொண்டர்க்குண்மைநவிற்றுறுதிருப்பைகொல்லென்
றண்ணல்வெள்விடையைச்சீறியானனஞ்சரிந்துவீழ
மண்ணகழ்கருவிதன்னால்வள்ளலார்துணித்திட்டாரால்.........(௬௨)

கடல்விடம்பருகுநீலகண்டனார்துணித்தலோடுஞ்
சுடரொளிநெய்த்தோர்பாயத்துண்ணெனநடுங்கிப்புல்ல
மடியனேன்பிழைத்ததிந்தமுறையினுமழியாதேனு
முடையவபொறுத்தியென்றுவொண்பதமிறைஞ்சிப்போற்றி (சங)

தன்பெயர்விளங்கத்தீர்த்தத்தடமொன்றுதொட்டுச்கோட்டி
னின்பருளிலிங்கமொன்றுங்கிருத்திநற்பூசையாற்றி
வன்பிழைதவிர்ந்ததன்றுமழவிடைமுதுத்தைவீழ்த்த
பின்புயர்மன்றினெய்திப்பிஞ்ஞகர்நடிக்கலுற்றார்...............(சச)

திரையெறிகங்கையூடுதிங்களுமரவுமாட
விரைகமழ்கொன்றைவேணிவெரிந்புறம்வருடிநாலக்
கரையறுகருணைவெள்ளங்கட்கடையெழுந்துபாய
வரையுடைப்புலித்தோல்பொங்கவரிபெய்நூபுரங்களார்ப்ப....(சரு)

கோமுகமுனியும்பட்டிமுனிவனுங்குறுகியேத்த
வேமுறுபூதநாதரிடனறத்துவன்றிப்போற்றக்
காமுற்விசும்பிற்றேவர்கடிமலர்மாரிதூர்ப்பத்
தீமுழங்கங்கைவள்ளதிருநடநவிற்றலோடும்....................(சசு)

வேறு.

கருணையேநோக்கியுள்ளகங்கசியச்கண்கணீரருவியிற்பாய
விருகையுஞ்சிரமேற்குவிதரப்புளகமெழவுடன்முழுதுங்கம்பிப்ப
வருணடநோக்கிநெடிதுபோதவசமாகநின்றானந்தந்திளைத்துப்
பருகியமதுவண்டெனப்பெருங்களிப்பாற்பாடினார்பரவையார்கொழுநர் (சஎ)

பாடியதொண்டர்பைம்பொன்வேட்டிரப்பப்பரம்பெருதிருந்திருந்தெய்த்திங்
காடுதலொழிவரோவனவரததாண்டவரெனவருணடனா
நீடியவிடையேபொன்றரவிரந்தார்நிமலனார்குறுநகைகாட்டி
நாடிமுன்னுண்டுதோழமைகொடுத்தநாவலாரூரருச்குரைப்பார்..........(சஅ)

பாடியநினதுபாட்டையேபெரிதாப்படர்ந்தெமைப்பரிசிலிங்கிரந்தாய்
நீடியவரியும்பிரமனுமறையுநெடுந்தவமாற்றியுங்காணுப்
பீடியனமதுதிருநடமதனைப்பெரிதெனமதித்திலைபோலு
மாடியநடனம்பாடியபாட்டுக்கருளியபரிசிலேயாமால்....................(சகூ)

அறம்பொருளின்பமூன்றையும்வெறுத்தோர்க்கானந்தத்திருநடங்காட்டித்
திறம்பயின்முத்தியளிக்குமித்தலத்திற்செம்பொனீவதுமுறையன்று
மறம்பயில்பொறிகளடக்கியீங்கடுத்தவானவரான்படைப்பெய்தப்
புறம்பயில்வஞ்சுளாரணியத்துப்பொற்புறவளித்தனங்காண்டி............(ருo)

வேட்டவேட்டாங்கெம்பதியினுங்காங்குவிழுப்பொருணல்கினமன்றி
யேட்டைநீபொருந்தப்பார்த்திருந்திலமேயிப்பதியொழியவாங்காங்குள்
பாட்டினுக்குவந்துசெம்பொருளின்னும்பல்குறக்கொடுத்துமென்றித்
தீட்டியபுகழான்சேரமான்றனக்குன்செய்திமுன்பேதெரித்தனமால்......(௫௧)

அங்கவன்சோழநாட்டுவந்தனனையன்பினுடன்கொடுபோந்து
வீங்கியபொருள்கணல்குவனறிகவென்றனர்கேட்டுமெய்த்தொண்ட
ரோங்கியமகிழ்வாருண்டதம்பெருமானெண்கழன்மறுவலும்வணங்கிப்
பாங்குறச்சிலநாட்பயின்றுபல்பதியும்பாடுவார்விடைகொடுபோந்தார்...(௫௨)

வெஞ்சமாக்கூடல்கற்குடியாறைமேற்றளியின்னம்பர்பிறவி
வஞ்சநோயனுக்கும்புறம்பயஞ்சமலவாவிசூழ்கூடலையாற்றூர்
நஞ்சமார்மிடற்றுநாதனைப்பாடிநயந்துபோய்முதுகுன்றமேத்தி
யெஞ்சுறுதிறைவரளித்தபொன்னாற்றிலிட்டுப்போந்தனர்கடம்பூரில்......(௫௩)

அப்பதிவழுத்தித்தில்லைமூதூரையடுத்தருணடங்கண்டுதொழுவா
ரெப்பொருளாயுமிருந்தருளிறைவரெறிதிரைக்காஞ்சிவாய்ப்பேரூ
ரொப்பறுவெள்ளிமன்றிடைத்தெரித்தவுறுசுவையானந்தநடனந்
துப்புறக்காட்டவிம்மிதமெய்தித்துழும்புகண்ணீருரநனைப்ப..............(௫௪)

வேறு.

சீரூரமடித்தாடுமெனவெடுத்துவிளம்புதிருப்பதிகந்தன்னுட்
பேரூரர்பெருமானைப்புலியூர்ச்சிற்றம்பலத்தேபெற்றாமென்று
பாரூர்பல்லவற்றுள்ளும்பேரூரேயிறைக்குரியபதியாமாறு
நாரூருமுளத்தினாற்சிறப்பித்துப்பாடினார்நாவலூரர்.........................(௫௫)

அங்ககன்றுபுறத்தூரும்பதிபலவும்பாடிப்போயாரூர்நண்ணித்
திங்களணிமுடியார்தந்திருவருளாலாற்றிலிடுஞ்செம்பொனெல்லாம்
பொங்குபுனற்குளத்தெடுத்துப்பரவையார்க்கினிதளித்துப்புனனாட்டெல்லைத்
தங்குபலபதிபாடிநடுநாட்டிற்பலபதிகடாழ்ந்துபோகி.....................(௫௬)

தொண்டைநாட்டிற்பதிகள்பலபாடிக்காஞ்சியெனுந்தொல்லைமூதூர்
வண்டுவார்குழலுமையாள்வழிபட்டவேகம்பம்வணங்கியேத்தி
யண்டர்நாயகரமருமப்பதியிற்பலபதிகளன்பிற்போற்றிக்
கொண்டல்சூழ்நெடுமாடத்தோணகாந்தன்றளியைக்குறுகினரால்........(௫௭)

அத்தளியிற்பெருமானார்பாட்டுவந்துசெழுநிதிமிக்களிப்பவாங்கி
மெத்தியவன்பொடுபுறம்போய்ப்பலபதியும்பணிந்தேத்திவிரிநீர்வேலை
முத்தினொடுமணிபவளங்கரையேற்றுமொற்றியூர்முதல்வற்போற்றி
யுத்தலத்திற்சிவபெருமான்றிருவருளாற்சங்கிலிதோளுவந்துவாழ்ந்தார்(௫௮)

